*Muracoli*

*Muracu 2, oli 12*

*June 17, 1955*

Record no. 945

முரசொலி வார இதழ்

ஆசிரியர்: மு. கருணாநிதி.. ௨

முரசு 2 | சென்னை | 17—6—55 | வெள்ளி | ஒலி 12

# குறளோவியம்



ஊர் முழுதும் அலைந்தார்கள்-தெருவுக்குத் தெரு தேம்பி அழுதார்கள்-வீட்டு வாயில்களிலே நின்று விம்மும் குரலில் "தாயே-மகாசி!" என்று அழைத்துச் சோர்ந்தார்கள். திருவோட்டில் எதுவுமே விழவில்லை; தெருப் புழுதியைத் தவிர! அதையும் துடைத்து அந்தப் பாத்திரத்தை சுத்தமாக்கிக் கொண்டான் அவன்.

"அய்யா-பசி தாங்கவில்லை!"

"அதோ-சமாராதனை நடக்கிறது-அங்கே ஓடுங்கள்" என்று பதில் தந்தான் வழிப்போக்கன்.

ஓடினார்கள்—ஆனால், அங்கே கதவை மூடினார்கள். 'எச்சில் இலை வந்து விழாதா?' என்று எதிர்பார்த்து ஏங்கிக் கிடந்தனர். கொல்லைப்புறத்திலே வெட்டிய குழியிலே அவைகளைத் தள்ளி புதைத்து விட்டார்களாம். அவாள் சாப்பிட்ட இலை. இவாள் தொடுவதும் மகா பாபமாம்!

ஆலயத்திலே மணியோசை கேட்டது. தந்தையும் மகளும் அங்கே ஓடினார்கள். பூஜை முடிந்தது. புளியோதரையும் பொங்கலும் பூசுரர் வீட்டுக்குச் செல்லும் வழியிலேதான், இந்தப் புழுதி மேனியர் நின்று கொண்டிருந்தார்கள். "கடவுளே!" என்று கதறினார்கள். கடவுள் பேசவில்லை; உண்ட மயக்கத்தில் அவர் உறங்கிவிட்டாரோ என்னமோ!— 'குடல் கருகுகிறது ஆண்டவனே!' என்று கூவிப் பார்த்தார்கள். குருக்கள் வீட்டிலேயிருந்து கிளம்பிய 'ஏப்ப ஒலி'தான் அவர்கள் காதில் விழுந்தது. கோயில் கொண்ட ஆண்டவன் இந்தக் கொடுமையான காட்சியைக் கவனிக்கவில்லை. 'மாட்டுக்குப் பதில் செக்கிழுக்கிறேன் அய்யா — ஏதாவது ஒரு வேலை கொடு—எங்கள் வயிற்றைக் கழுவிக் கொள்ளுகிறோம்' —இப்படி எத்தனையோ பேரைக் கேட்டுப் பார்த்தாகி விட்டது. வேலையிருக்கிறது என்று கூறியவர்கள் எல்லாம், அவளது விழிபசைவை நேம்தனையாகக் கேட்டார்கள். "சோறு பெரிதல்ல; மானமே பெரிது!" என்று கூறிவிட்டு விடைபெற்றுக் கொண்டார்கள். பிச்சை எடுத்து வாழ்வோம் என்று. தீர்மானித்தார்கள்—வள்ளுவர் அவர்களைக் கண்டார். பிச்சை யெடுப்பதுகூட தகாத செயல்தான் எனக் கண்டார்—

"ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்"

★ தொடர்ச்சி 4-ம் பக்கம்

## 'எவரெஸ்ட் தானம்'

"கிழிந்த துணிகளைத் தானம் கொடுப்பது எளிது. ஆனால்; நிலத்தைத் தானம் கொடுப்பது கஷ்டம்!" — இது ஆச்சாரியாரின் புதிய கண்டுபிடிப்பு! பி. சி. ஜி ஆராய்ச்சியோடு ராஜாஜி இப்போது இந்த ஆராய்ச்சியிலும் ஈடுபட்டிருக்கிறார்.

தருமபுரம் பண்டார சன்னதியிடமிருந்து சென்ற வாரம் பொன்னாடை தானம் பெற்ற ஆச்சாரியாருக்கு வேண்டுமானால் 'கிழிந்த துணிகள் தானம்' எளிதாக இருக்கலாம்! அது அவ்வளவு எளிதான காரியமா என்று தெருவிலே துணிப் பிச்சை கேட்கும் பெருமாள்மாட்டுக்காரனைத்தான் கேட்க வேண்டும்!

பூதானமாம்!— கோதானம் — கன்னிகாதானம்—போன்ற பண்டைய தானங்களின் பட்டியலிலே இந்தப் புதிய தானமும் புகுந்துகொண்டிருக்கிறது!

செத்துப்போன காரல் மார்க்ஸ் விநோபா பாவேயின் வடிவிலே இந்தியாவை வட்டமிடுகிறார்!

ஏங்கெல்ஸ் சாகவில்லை— ஜெயப்பிரகாஷ் நாராயண் உருவிலே அவர் ஆவி புகுந்துகொண்டிருக்கிறது!

—இப்படியெல்லாம் செத்துப் போன காங்கிரசின் சமாதியிலே புற்களாய் முளைத்திருக்கும் பிரஜா கட்சியினர் பேரிகை கொட்டுகின்றனர்!

இப்போது புல்லின் வேர், மண்ணுக்கு அடியிலே மண்ணாகிக் கொண்டிருக்கும் சவத்தையும் தொட ஆரம்பித்திருக்கிறது. தற்போது காங்கிரஸ்காரர்களும் பூமிதானம்பற்றி பேசுகிறார்கள்! பிரசாத் ஆதரிக்கிறார்; பிரதமர் கண்ஜாடை காட்டியிருக்கிறார்; தீவிர காங்கிரஸ்வாதிகளோ விநோபாஜியை காந்தியின் வாரிசாக நினைக்கத் தொடங்கிவிட்டார்கள்.

திருத்துறைப்பூண்டியில் நடைபெற்ற மூன்றாவது சர்வோதய மாநாட்டில் ஆச்சாரியார் கலந்து கொண்டாராம்!



அதுபோழ்து தஞ்சை மாவட்ட நிலப் பிரபுக்கள் பூமிதானம் செய்தார்களாம், நிலமற்ற ஏழைகளுக்கு!

புலிக் குட்டிகள் தங்கள் பற்களிலே ஒன்றிரண்டை கழற்றிக் கொடுத்திருக்கின்றன!

பாம்புக் கூட்டம் வாயிலுள்ள விஷப் பையிலிருந்து சில துளி விஷங்களை துப்பி விட்டதாம்!

மகிழ்ச்சியான செய்திதான்! நிலமற்றோருக்கு நிலம் வழங்க வேண்டியது அவசியம் தான்!

ஓராயிரம் ஏக்கர் வைத்திருப்போன்— உயரிய உப்பரிகையிலே உலவுவோன்— ஒரு ஏக்கரை தானம் செய்துவிட்டால் போதுமா? நிலப் பிரபுத்வம் நிர்மூலமாகி விடுமா?

இந்தக் கேள்விகளைக் கண்டு கலங்காமல் பூமிதானம் சேர்க்கும் காரல் மார்க்சின் நடமாடும் போட்டோக்கள்— தவறு; தவறு! போட்டோக்களல்ல! காரல் மார்க்சின் கார்ட்டூன்கள்!—ஒரு உண்மையை மறந்து விட்டார்கள்!

மறைத்து வைத்திருந்த சீப்பை சிரமப்பட்டு கண்டுபிடித்துவிட்டால் மட்டும் கல்யாணம் சிறப்பாக நடைபெற்றுவிடுமா? மணமகன் எங்கே? வருங்கால மனையாட்டியை அவன் ஒரு முறையாவது கண் குளிரப் பார்த்ததுண்டா? வரப் போகும் குடும்பவிளக்கு குணவதிதானா? அவன் குணத்துக்கு ஏற்றவள்தானா?

—இந்தக் கேள்விகள் அவசியமானவை

சீப்பும், பருப்பும் இருந்தால் போதும்; கல்யாணம் முடித்துவிடலாம்— என்று கனவு காணும் 'பூமிதானத் தரகர்கள்' இவைகளைப் பற்றியெல்லாம் கொஞ்சம் சிந்திக்கவேண்டும்.

உழுபவனுக்குத்தான் நிலம் உரிமையாக வேண்டும்—உண்மைதான்; ஒப்புகிறோம்! ஆனால், ஒன்று!

எவரெஸ்ட் சிகரத்தை டென்சிங்தான் கண்டுபிடித்தார். அதற்காக அவருக்கு எவரெஸ்ட் சிகரத்தை பரிசளித்தால் அதை வைத்து அவர் என்ன செய்ய முடியும்?

பரிசு பெற்ற செய்தியை பத்திரிகையிலே படித்து பெருமைப் படலாம் — அந்தப் பனிப்பாறையிலே அவர் வாழ முடியுமா?

திருத்துறைப்பூண்டி மாநாட்டிலே பூமிதானம் வழங்கிய மிராசுதார்கள், அப்படிப்பட்ட பனிப் பாறைகளைத்தான் ஏழைக் குடியானவர்களுக்கு வழங்கியிருக்கிறார்கள்! டென்சிங்கிற்கு 'எவரெஸ்ட் தானம்' அளிக்கும் கற்பனையைத்தான் நினைவு படுத்துகிறார்கள்!

இதோ, விபரம் தருகிறேன்!

திருத்துறைப்பூண்டியிலே நிலதானம் பெற்ற ராமமிர்தம்மாள் என்ற ஏழைக் கிழவி, ஆச்சாரியாரை அணுகி, 'நான் கிராமத்திற்குத் திரும்பிப்போக காசு இல்லை; தயவுசெய்து டிக்கட்டிற்காவது பணம் தாருங்கள். என்று கேட்டாராம் அதற்கு ஆச்சாரியார். ஏற்பாடு செய்வதாகப் பதில் சொன்னாராம்!

வீடு திரும்பிச் செல்வதற்கு செப்பாலடித்த சல்லி கிடையாது—அவளுக்குத்தான் பொன்விளையும் பூமிதானம் செய்திருக்கிறார்கள்!

ஊர் திரும்புவதற்கு நாலணா கொடுத்து டிக்கெட் வாங்க வசதியில்லாத கிழவி, நாளை பருவமழை பெய்ததும் விதை வாங்க எங்கே போவாள்?

அதற்கு முன்னர், தானம் பெற்ற நிலத்துக்கு தண்ணீர் பாய்ச்ச-பரம்படிக்க-பண்படுத்த—ஏர் வாங்க-யாரிடம் செல்வாள்? எந்த ஆச்சாரியாரைப் போய்க் கேட்பாள்?

இன்று சர்வோதய மாநாடு கூட்டியோர் நாளை அந்தக் கிழவியின் கிராமத்துக்குச் சென்று அந்த வேலையைச் செய்து தருவார்களா?—விநோபா சீடர்கள் யோசித்துப் பார்க்கட்டும்!

அய்யோ! சர்வோதய சண்டப் பிரசண்டர்களே! வேண்டாம் இந்த விபரீதம்! அடிப்படையை திருத்தாமல் ஆகாயப் பந்தல் போடாதீர்கள்! பூமிதானம் போன்ற போலி புஸ்வாணம் கிளப்பி வெறும் ஊர்ப் புரளி செய்யாதீர்கள்! ஒழுங்காக மலர இருக்கும் புரட்சிக்கு எதிர்ப் புரட்சி நடத்தாதீர்கள்!

சமுதாயக் கோபுரத்தின் அஸ்திவாரத்தையே திருத்தவேண்டும்—நீங்கள் அதைச் செய்யாமல் கலசத்தையல்லவோ திருத்துகிறீர்கள்!

நெஞ்சிலே கைவைத்து உங்கள் செயலை ஒரு முறை—வேண்டுமானால் வெளியார் காதுக்கு எட்டாமல் மௌனமாகவே விவாதித்து ஒரு முடிவுக்கு வந்துவிடுங்கள். இல்லையேல் தோல்வி நிழலாகி உங்களைத் தொடரும்!

## 'ஜனசக்தித் தமிழ்'

பிரிட்டனிலே தேர்தல் முடிந்ததும் இன்னின்ன வகுப்பார் இந்தக் கட்சிக்கு ஓட்டளித்தார்கள்—அந்த மத்தியதர வகுப்பு அந்தக் கட்சியை கைவிட்டது—என்றெல்லாம் முடிவு சொல்லுவார்கள். தென்னாட்டைப் பொறுத்த வரையில் நிதியென்று வந்தால்தான் சில கட்சியின் 'ஓட்டை ஓடசல்கள்' அம்பலமாகின்றன— அப்போதுதான் பொது நீரோடையிலே அழுக்கு ஆடைகள் அலசப் படுகின்றன!

இதோ, கரையில் ஒதுங்கிய அழுக்கை கொஞ்சம் பாருங்கள்!

சினிமா ஒழிக்கும் சிலம்பக் கட்சியொன்று, பிரபல படத் தயாரிப்பாளர்கள் நேஷனல் பிக்சர்சாரிடமிருந்து 500-ரூபாய்கள் பெற்றுக்கொண்டு, கார் நிதியில் ஒரு பெருந்துளியைச் சேர்த்தது. இப்போது கம்யூனிஸ்ட் கட்சியின் ஜனசக்தி நிதியிலே சென்றவாரம் மூவாயிரம் ரூபாய்கள் திடீரென்று ஏறியிருக்கின்றன. எப்படி வந்தது மூவாயிரம் ரூபாய் என்று கேட்கிறீர்களா?

ஏதாவது தொழிற் சங்கம் சேர்த்துக் கொடுத்ததா?

தொழிலாளர்கள் தங்கள் வயிற்றை-வாயைக் கட்டி இப்படி உண்டியல் சேர்த்தார்களா?

இல்லை; இல்லை. 'ஜனசக்தி'யில் வந்த வாசகப்படி 'நிலப் பிரபுத்வக் குடும்பத்'தில் பிறந்த நன்னிலம் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஒருவர்தான் அந்த மாபெரும் தொகையை 'பாத காணிக்கை' யாக்கியிருக்கிறார்!

திராவிடப் பார்லிமெண்டுக் கட்சியை பிரபுத்வக் கும்பல் என்று கூறும் கோஷ்டிதான், அந்த பிரபு வம்சத்திலிருந்து வழக்கம் போல 'கப்பத் தொகை' பெற்றிருக்கிறது! இதற்குப் பெயர்தான் வெகுஜன நிதியாம்! 'வயிறு காக்கும்' இவர்கள்தான் 'மானம் காக்கும்' தி மு. க-வை வசை பாடுகிறார்கள்!

அது கிடக்கட்டும்—மந்திரி அளகேசனார் தமிழிலே புதுச் சொல் செய்வித்தார்' அல்லவா? அந்தப் பாணியைப் பின்பற்றி 'ஜனசக்தி'யாரும் 'வெகுஜன பாக்டரி'யிலே புதுச் சொல் வார்த்திருக்கிறார்.

இதோ, அந்த செய்தியைப் படியுங்கள்:—

நன்னிலம் தந்த பொன்னிலம்
தோழர் என். சவுரிராஜன்,
ரூ 3000 நன்கொடை

—இப்படி ஜனசக்தி 5–6–55 இதழின் அனுபந்தத்திலே காணப் படுகிறது!

முதல் வரியின் பொருள் புரிகிறதா? புரியாதுதான்!

'அம்மாமித் தமிழை' புரிந்து கொள்ளலாம்—'ஜனசக்தி'த் தமிழ் அதை விடக் கடினமாயிற்றே!

'நன்னிலம் தந்த பொன்னிலம்'—அர்த்தம் தெரிந்து கொள்ள மார்க்ஸ் அகராதியைப் பொறுமையுடன் புரட்டுங்கள்!

★



தலையங்கம்
காதலிலே கல்வியிலே களம் போதும் பேச்சு; கணவனுக்கும் மனைவிக்கும் திராவிடமே மூச்சு!
சென்னை 17—6—55 வெள்ளி

# ரஷ்ய விஜயமும் நெய் விஜயமும்!

ஆங்கிலேயன் தன்னுடைய கிழிந்துபோன மான்செஸ்டர் துணிகளுக்கு மார்க்கெட் பிடிக்க வேண்டுமானால், முதலில் பிறநாடுகளுக்கு கிருஸ்தவ மதகுருக்களை அனுப்பிவைக்கிறான். அந்நாட்டுப் பூர்வகுடிகள் அந்தப் பாதிரிகளைக் கொலை செய்கின்றனர். பிறகு, அவன் கிருஸ்தவ மதத்துக்கு வக்காளத்து வாங்கிக் கொண்டு தன் துப்பாக்கியைத் தூக்கிச் செல்கிறான்; சண்டை போடுகிறான்; ஆக்ரமிக்கிறான்; தேவகுமாரன் தந்த பரிசென்று சொல்லி அந்த நாட்டை தனக்குத் தகுந்த மார்க்கெட்டாக்கிக் கொள்கிறான்— புகழ்பெரியார் பெர்னார்ட்ஷா ஆங்கிலேயரின் 'மார்க்கெட் பிடிக்கும் வித்தை' பற்றி தன்னுடைய நாடகமொன்றில் இந்த மணியான வாசகங்களை உதிர்த்திருக்கிறார்.

வடநாட்டு சேட்டுகள், மொழி கொண்டு தென்னாட்டவரின் விழி தோண்டி, அடிமை வலை பின்னுவதைப்போல, ஆங்கிலேயன் பாதிரியைப் புழுவாகப் பயன் படுத்தி ஏகாதிபத்யத் தூண்டில் போடுகிறான்.

ஆனால் அமெரிக்கன் மொழியையும், மதத்தையும் கொண்டு சரண்டல் காவியத்தின் முன்னுரை எழுதுவதில்லை. 'உதவி' என்ற பெயரால் டாலர் சிங்காரிகளை ஏற்றுமதி செய்து, அதற்கு ஈடாக அந்தந்த நாடுகளின் சுதந்தரத்தை இறக்குமதி செய்து கொள்கிறான். 'அன்பளிப்பு' என்னும் கண்ணி வைத்து, விடுதலை விருத்தம் பாடித் திரியும் ஆசிய வானம்பாடிகளை கூட்டிலே அடைத்துவிடுகிறான்! டாலர் துரைகள் இப்படித்தான் சிங்மன் ரீகளை-சியாங்கே ஷேக்குகளை சிருஷ்டித்த வண்ணமிருக்கிறார்கள்!

இந்தச் சூழ்நிலையிலேதான் நாம் மோதிலால் மைந்தரின் நிலை பற்றி ஆராய வேண்டும். நேருவைச் சிலர் 'இன்னும் அமெரிக்க முத்திரை குத்தப்படாத ஆசியாக்காரர்'—என்றுதான் புகழ்கிறார்கள். 'நடுநிலைமைக் கொள்கையிலே நாட்டம் கொண்டோர், நாடுவரோ டாலர் உதவி'—என்று தொகையறா பாடுகின்றனர், அவருக்குத் துணை போகும் தேசிய வீரர்கள்!

'நேரு புல்கானினைச் சந்தித்தார்—இனி அவர் புத்துலக சிற்பியாகி விடுவார்!'— என்று யூகம் சொல்லுகிறார்கள்!

மாஸ்கோ பயணம் தன்னைப்பொறுத்தவரை 'மயான காண்டத்'தில் முடிந்துவிடுமோ என்று பிர்லாக்கள் பிலாக்கணம் படிக்க, அவர்களுக்கெல்லாம் 'நானிருக்க பயமேன்!'—என்று சாயிபாபா தோரணையிலே கிருஷ்ணமாச்சாரியார் அபயம் அளிக்க—நேருவின் ருஷ்ய விஜயத்தின் விளைவு பற்றி இப்படியெல்லாம் சித்திரம் தீட்டிக் களிப்பிலாழ்கிறார்கள! சிகப்புடை தரித்து, கறுக்கரிவாள்—சுத்தி சகிதம் மோதிலால் மைந்தர் இந்துஸ்தான் திரும்புவார்—என்று சில அவசரக்காரர்கள் ஆருடம் கணிக்கிறார்கள்!

ஆனால் நேருவின் சென்ற கால அரசியல் நடவடிக்கை தெரிந்தோரெல்லாம் மாஸ்கோ விஜயத்தின் முடிவும்—விளைவும் வேறு விதமாகத்தான் இருக்குமென்று எதிர்பார்க்கின்றனர்!

மாலட்டோவுடனும், மாஜியாகிவிட்ட மாலெங்கோவுடனும் மாறி மாறி அவர் கைகுலுக்கிக் கொண்டிருந்தாலும் கூட, அலகாபாத்தாரது கருத்தெல்லாம் ஐசன் துரையைத்தான் வட்டமிட்டிருக்குமென்றுதான் நம்பவேண்டியிருக்கிறது!

ரஷ்யாவுக்கு நேரு புதியவரல்ல! அவர் புதல்வியார் இந்திராகூட சில மாதங்களுக்கு முன்னர்தான் மாஸ்கோ மிதித்து மீண்டிருக்கிறார். முன்பொருமுறை அருமைத் தந்தையாரோடு அவர் சோவியத்தைச் சுற்றிப் பார்த்த அன்றே ரஷ்யா பற்றிய தன் அந்தரங்கத்தை வெளியிட்டிருக்கிறார்.

1917-ம் ஆண்டிலே அவர் குமாரத்திக்கு எழுதிய கடிதம் பேசுகிறது; கேளுங்கள்;

"ஜாரிசம் என்ற ஒருவிதமான கொடுங்கோலாட்சியிலிருந்து விடுபட்டு கம்யூனிசம் என்னும் வேறு விதமான கொடுங்கோலாட்சியில் ரஷ்யா விழுந்து விட்டது"

இந்தக் கருத்துக்களை கம்யூனிஸ்ட் நண்பர்கள் கண்ணிலே காட்டினால், இதிலே வார்த்தைக்கு வார்த்தை அமெரிக்காவிடமிருந்து பெற்ற கைக்கூலியின் 'டால்' அடிக்கிறது என்பர்; டாலரின் வாடை மூக்கைத் துளைக்கிறது என்று முணுமுணுப்பர்!

அலகாபாத்தார் மீது என்ன வாடை வீசுகிறதோ என்னவோ— ஆனால் சென்ற கிழமை சென்னையிலே இறக்குமதியான நெய்யிலே அமெரிக்க வாடையடிக்கிறது—என்பதை யாரும் மறுக்க முடியாது!

'பட்டர் ஆயில்' என்று அதற்குப் பெயராம் — பல ஆயிரம் டன் வெண்ணெயை நெய்யாக டாலர் சீமான்கள் மாற்றியிருக்கின்றனர். அவைதான் தானமாக இந்தியா வர இருக்கின்றது. இதிலே 1,100 டன்கள் சென்ற மாதம் சென்னை வந்திருக்கிறது. ஜூன் 1-ம்தேதி மீண்டும் இருநூறு டன்கள் இறக்குமதியாகி இருக்கிறது.

இப்படி 'டன்' கணக்கில் நெய் தானம் வேண்டுமென்று யார் கேட்டார்கள்? நெய் பற்றாக்குறையால் பாரத மக்கள் எலும்பும், தோலுமாக இளைத்து விட்டார்களா?

இல்லை!

ஏதோ அமெரிக்கா தானமாகக் கொடுத்தது; பெற்றுக்கொண்டோம்- என்றுதான் காரணம் கூறுகிறார்கள்!

ஒரு சில மாடுகளை வைத்துக்கொண்டு—நெய் தயாரிப்பில் ஈடுபட்டிருக்கும் எண்ணிறந்த ஏழை யாதவத் தோழர்கள் இதனால் எந்த விதத்தில் பாதிக்கப்படுகிறார்களென்று இனிமேல்தான் தானம் பெற்ற பெரியவர்கள் உணர்வார்கள்!

அபரிமிதமான அளவில் உற்பத்தியான வெண்ணெயை அமெரிக்காவிலேயே விற்க முனைந்தால், விலை குறைந்து விடுமே—என்று எண்ணிடும் லாப வேட்டைக்காரர்கள்தான் அதைத் தானமாக ஓட்டேந்தியிருக்கும் இந்தியாவுக்குக் கப்பலேற்றி விட்டார்கள்!

'முதலில் பாதிரி—பின்னர் படை' —என்னும் ஆங்கிலேயர் பாணியும், அதே முறையைப் பின் பற்றி, 'முதலில் தானம்—பின்னர் தண்டம்' என்று சொல்லும் அமெரிக்க திட்டமும்தான் இந்த நேரம் நம் நினைவுக்கு வருகின்றன!

தானமாக வழங்கப்பட்ட இந்த நெய் நம் மக்களுக்கு பிடித்துவிட்டால், நாளை சென்னை கடற்கரையிலே வியாபார முத்திரை குத்திக் கொண்டு நெய் ஏற்றிய கப்பல்கள் வரிசை, வரிசையாக நிற்கும்!

கடைகளிலே அமெரிக்க நெய் கிடைக்கும்—தானமாக அல்ல; சரசமான விலைக்கு!

இஷ்டப்பாடமாக இந்தியைத் திணிப்பதைப் போலத்தான் இன்று தானமாக நெய் வழங்கி நம் மக்களிடையே அந்தப் புதுத் தயாரிப்பைப் பழக்கப்படுத்துகின்றனா!

நாளை இந்தப் பழக்கம் தவிர்க்க முடியாத தொத்து நோயாக வடிவம் எடுக்கலாம்! அதன் காரணமாக அமெரிக்காவிலிருந்து நெய் இறக்குமதி செய்ய வேண்டிய நிர்ப்பந்த நிலை ஏற்படலாம்!

பிறகு நெய் வர்த்தகம்—அதை நம்பி வாழ்நாள் நடத்தும் நம் நாட்டு ஏழை எளியோர்-இந்த நிலைமைகள் எப்படியெப்படி உருவெடுக்கும் என்பதை தானம் பெற்றோர் சிறிது சிந்திக்கவேண்டும்!

அங்கே ரஷ்யாவுக்கு நேரு விஜயம்— இங்கே அமெரிக்காவிலிருந்து நெய் விஜயம்—நேரு சிகப்பாகிவிடுவாரோ என்று சித்தம் சோர்வோர், இந்த விசித்திர வேறுபாட்டையும் உணரவேண்டும்!

★ 1-ம் பக்கத் தொடர்ச்சி

## குறளோவியம்......

தண்ணீரின்றி வருந்தும் பசுவுக்காகப் பரிந்து, பிறரிடம் 'சிறிது தண்ணீர் தாருங்கள்' எனக் கேட்பதும் குற்றமானது எனக் குறள் தந்தார். அதாவது பிறரிடம் 'யாசகம்' கேட்பது அவ்வளவு தவறானது என்பதை மிகைப்படுத்திக் கூறினார். குற்றம், இரந்து வாழ்பவனுடையது என்பதோடு விட்டு விட்டாரா? — அதுதான் இல்லை. ஆலயத்து வாயிலிலே நின்று அழுகுரல் எழுப்பும் அவர்களையும் பார்த்தார். அந்த ஆண்டவனின் சிலையையும் பார்த்தார்— ஆத்திரம் தாங்க முடியவில்லை- 'உலகத்தை இயற்றியவனே! நீ ஒழிந்து போ!' என்று கூவினார்!

இதோ குறள்:—

இரந்து முயிர்வாழ்தல்
வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான்.

பிச்சை எடுத்துத்தான் பிழைக்க வேண்டுமென்ற நிலையிருக்குமேயானால், இந்த உலகை இயற்றியதாகச் சொல்லப்படும் கடவுளே! நீ அழிந்து கெட்டுப் போ!- என்பது இதன் பொருள்! இந்த 'சாபம்'-அதோ, அந்த சோக உருவங்களின் கண்களிலேயிருந்து வெளிப்படுகிறதா இல்லையா? கவனித்துப் பாருங்கள்!

—கருணா

### வாழ்த்துகிறோம்

சென்ற 12-6-55 அன்று ஸ்ரீவில்லிப்புத்தூர் தி. மு. க தோழர் பாக்கியநாதன் அவர்கள், தோழியர் பாக்கியலட்சுமி அவர்களை, தோழர் எம். எஸ். ராமசாமி அவர்கள் தலைமையில் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டார். மணமக்களை வாழ்த்துகிறோம்.

# திரும்பிப்பார்!

## மறக்க வேண்டாம், மதவாதிகள்!

மக்களை மாய்க்கும் மதத்தை நாம் குறை கூறும் போது, மதவாதிகளும், மதத்திரையில் வாழும் பண்டார சன்னதிகளும், மதத்தரகர்களும், 'மதம் தகர்ந்தால்-நம் சுகபோக வாழ்வும் தகர்ந்து விடுமே' என அஞ்சிடும் அடிகளார்களும், வாரியர்களும், நம்மீது சீறி விழுகிறார்கள். "மதம் மக்களை மாய்க்கும் மது: அதனின் கொடுமையால் சீரழிந்தவர்கள் ஏராளம்! அது அழிக்கப்படவேண்டும்; மதத்தின் சீர்கேடுகள் களையப்படவேண்டும்!"—என்று கூறும் பகுத்தறிவாளர்களை ஏசும் எத்தர் கூட்டத்திற்கு, பிரெஞ்சு இலக்கிய பொன்னேட்டில் வைரமணிகளால் பொறிக்கப்பட்டுள்ள வால்டேரின் சொற் கோர்வையை சமர்பிக்கின்றோம், சிந்தனைக்கு!

" தன்னுடைய மதத்தைச் சோதித்துப் பாராமல் ஒப்புக் கொள்ளும் ஒருவன், தன் கழுத்தை நுகத்தடியில் பூட்டக் கொடுக்கும் மாட்டை ஒத்திருக்கிறான்"

இத்தகைய பொன்னான கருத்துக்களை உதிர்த்த வால்டேரையும் அந் நாட்டு மதவாதிகள் எதிர்க்கத்தான் செய்தனர். அது மாத்திரமல்ல; சிறையிலடைத்தார்கள்—சித்ரவதை செய்தார்கள்-நாடு கடத்தினார்கள்-ஆயினும் அந்த எழுத்துக்கோமான் தன் கருத்துக்களை மாற்றிக் கொள்ளவில்லை. காலம் மாற மாற, அந் நாட்டு மக்களும் தங்களது கருத்துக்களை மாற்றிக் கொண்டனர். அன்று எந்த வால்டேரை சிறையிலடைத்து சித்ரவதை செய்தார்களோ, அந்த வால்டேரின் கருத்துக்களை பொன்னென போற்றுகிறார்கள் இன்று. பர்னேயில் அவன் பிறந்த வீட்டைபாதுக்காத்து, யாத்திரை ஸ்தலம் போல இன்று போற்றுகிறார்கள்.

அது போலவே, நம்மை கல்லாலும், சொல்லாலும் அடிக்கின்ற அன்பர்களும், நம் கருத்துக்களை காலம் கரையக் கரைய, நிச்சயம் ஏற்றுக் கொள்வார்கள். வருங்காலத்தில் நம் கொள்கைகள் நம்மைச் சாடுபவர்களின் இதயத்தில் குடிபுகத்தான் செய்யும்.

★

### எலி பூனைச் சட்டம்

அண்மையில் நடந்த பிரிட்டிஷ் பொதுத்தேர்தலில் இருபத்திநான்கு பெண்மணிகள் பார்லிமெண்டுக்கு தேர்ந்தெடுக்கப் பட்ட செய்தியை அறிந்திருப்பீர்கள். அந்நாட்டு நங்கைகள் அந்த உரிமையைப் பெற கொட்டிய குருதி கொஞ்சம் நஞ்சமல்ல!

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பெண்களுக்கு ஓட்டுரிமை கூட கிடையாது அங்கே! அதை எதிர்த்து ஒரு பெருங் கிளர்ச்சி செய்தது அந்நாட்டு பெண் குலம். 'பெண்கள் வோட்டுரிமை இயக்கம்' என்று அது அழைக்கப் பட்டது. ஆண்கள், வழக்கம் போல அசட்டையாக இருந்தார்கள். 'அடுப்பங்கரையில் பணிபுரியவே பெண்கள் லாயக்கானவர்கள். பார்லிமெண்டில் பணி புரியும் தகுதி அவர்களுக்குக் கிடையாது' என்று வாதாடியது ஆண்குலம்.

வெகுண்டெழுந்தனர் அந்நாட்டு வனிதைகள். 'சமைக்க மட்டுமல்ல; சமர் புரியவும் தெரியும்' என்று கொக்கரித்துக் கிளம்பினர். பார்லிமெண்டில் சென்று 'கலாட்டா' செய்தனர். உரிமை வெறியால் பெண்மை மறந்து மந்திரிகளையும் தாக்கினர். போலீஸ் பாதுகாப்போடு மந்திரிகள் வாழ வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சிறையில் அடைத்தார்கள், உரிமைக் குரல் எழுப்பிய உத்தமிகளை. சித்தம் சோரவில்லை: ரத்தம் சிந்தவும் தயாராக இருந்தார்கள். 'தூக்குமேடையா? அன்றி, துப்பாக்கிக் குண்டுகளா? அஞ்சோம்—அயரோம்' என்று எழும்பிய அப்பெண் குலத்தில் விண்முட்டும் குரல் கேட்டு, குலை நடுங்கியது ஆட்சி மன்றம்.

அவர்களின் உரிமைக் குரலை ஒடுக்க பார்லிமெண்ட் ஒரு சட்டம் இயற்றியது. அந்தச் சட்டத்தைத்தான் மக்கள் 'எலி பூனைச் சட்டம்' என அழைத்தனர். கொடுமை நிறைந்த அச்சட்டத்தை எதிர்த்தும் போர் முரசு கொட்டினர் அப்பூங்கொடிகள். சில ஆண்டுகளுக்குப் பின் வோட்டுரிமை அவர்களுக்கு அளிக்கப்பட்டது. அதன் விளைவுதான், இன்று இருபத்து நான்கு பெண் மணிகள் பார்லிமெண்டுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது! ஆரம்பத்தில் அவர்கள் சிந்திய இரத்தம் வீண் போகவில்லை. உரிமை கோருபவர்களை இன்று கொடுமைப் படுத்துவது, கோல் ஏந்திகளின் கொள்கையாயினும், குறுகிய காலத்திலேயே அந்த 'உடமை விரும்பி'களிடம் அவர்கள் அடிபணிந்துதான் ஆகவேண்டும்! ஃ

'முரசொலி'
சந்தா விபரம்

| | |
|---|---|
| உள்நாடு-இலங்கை | |
| ஆண்டு சந்தா | 6-0-0 |
| 6-மாத சந்தா | 3-8-0 |
| வெளிநாடு | |
| ஆண்டு சந்தா | 7-0-0 |
| ஆறுமாத சந்தா | 4-0-0 |

மூன்று மாத சந்தா கிடையாது.

## ★ மகாபாரதம் - [தொடர் சித்திரம்] - 11 ★

பரத்துவாச முனிவர் தவம் செய்கிறார் - துரோண கும்பத்திற்கு எதிரே!

தவத்தைக் கலைக்க இந்திரன் மேனகையை அனுப்புகிறான்..

மேனகையை தூரத்தில் கண்டதுமே தவசித்த தாகம் தணிந்து துரோண கும்பத்தில். ...... விழுகிறது.

துரோணகும்பத்திலே உடனே குழந்தை பிறக்கிறது...

அந்தக்குழந்தைதான் 'கிருபி' யை மணக்கும் துரோணச்சாரியார்...

(தொடரும்)



# நம்பிக்கை!

சிட்னஸ் நதிப் போருக்குப் பின் பயங்கரமான மயான அமைதி நிலவியிருந்தது. கிரேக்கப் படையின் பயங்கரத் தாக்குதலைத் தாங்க முடியாமல், பாரசீக மன்னன் டரயஸ்ஸும், அவன் படைகளும் சிட்னஸ் நதிக் கரைக் காடுகளில் பதுங்கி ஒளிந்தன. கடுமையான போருக்குப்பின் கிரேக்க வீரர்களும் களைப்பின் மிகுதியால், பாசறையில் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டனர். சிட்னஸ் நதிச் சமவெளியில் காணப்பட்ட பல்லாயிரக்கணக்கான கிரேக்க கூடாரங்களின் மத்தியில், ஒரு பெரிய கூடாரம் கம்பீரமாக காட்சியளித்தது. அதன் உச்சியில் கிரேக்கக் கொடியொன்று அசைந்தாடிக் கொண்டிருந்தது. அந்தக் கூடாரம்தான் மாசிடோனியா மன்னன் அலக்சாண்டரின் பாசறை. போர்க் களத்தில் வெற்றி கண்ட போதெல்லாம், விழாக்களுக்கும், கேளிக்கைகளுக்கும் இருப்பிடமாக இருந்த அந்தப் பாசறையும், இந்த வெற்றிக்குப் பின் மௌனத்தை அணிகலனாகக் கொண்டிருந்தது. அலக்சாண்டரின் பாசறையைச் சுற்றியிருந்த வீரர்கள் 'குசு குசு' வென்று ஏதோ பேசிக் கொண்டனர்.

பாசறைக்குள்ளே அகில்மரக் கட்டிலொன்றில் அலக்சாண்டர் படுத்திருந்தான். தர்க்க ஞானிகளான தன் நண்பர்களுக்கு விவேகத்தையும், தன்னோடு அழைத்து வந்த அழகிகளுக்கு அபிமான வார்த்தைகளையும், கிரேக்கப் போர் வீரர்களுக்கு உற்சாகமூட்டும் வீர மொழிகளையும் வாரி வழங்கிய அவனுடைய வாய், வாழ்க்கையின் கடைசி ஆலாபனமான "ஐயோ, அப்பா!" என்ற சொற்களை முனகிக் கொண்டிருந்தது. அவன் கட்டிலைச் சுற்றிலும் கிரேக்கத் தளபதிகளும், போர் ஆலோசகர்களும் கவலை தோய்ந்த முகத்தோடு உட்கார்ந்திருந்தனர். கிரேக்க வைத்தியர்கள் அலக்சாண்டரின் கையைப் பிடித்துப் பார்ப்பதும், பிறகு ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து ஒன்றும் தோன்றாமல் முகத்தைச் சுளுக்குவதும், உதட்டைப் பிதுக்குவதுமாக இருந்தனர். ஒளி உமிழும் அலக்சாண்டரின் கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்து வழிந்து கொண்டிருந்தது!

"கிளீட்டஸ்!"

கிளீட்டஸ் அலக்சாண்டரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான நண்பன். ஒரு முறை அலக்சாண்டரின் உயிரை பெரும் ஆபத்திலிருந்து காப்பாற்றியிருக்கிறான். அவனைத்தான் இப்பொழுது அலக்சாண்டர் அழைத்தான். கிளீட்டஸ் அலக்சாண்டரின் அருகில் சென்றான்.

"நம் நாட்டு வைத்தியர்களால் தீர்க்க முடியாத வியாதிதானா இது, கிளீட்டஸ்?" — அலக்சாண்டரின் கேள்வியில் ஏக்கம் ஒலித்தது!

"வேந்தே, இந்த வியாதி அவர்களுக்குப் புதுமையானதாகத் தோன்றுகிறது. இது பாரசீகத்துக்கே—அதிலும் சிட்னஸ் நதிச் சமவெளிக்கே—சொந்தமான வியாதியாக இருக்கக்கூடும் என்று கருதுகிறார்கள்".

கிரேக்க வைத்தியர்களான சிமேனும், திபேயும் உட்கார்ந்திருந்த பக்கம் அலக்சாண்டரின் கண்கள் திரும்பின. அவன் கேட்டான்: "உங்களால் கூடவா என்னைப் பிழைக்கவைக்க முடியாது?"

தங்களுடைய வைத்தியத் திறமைக்கே 'சவால்' விடும் இந்தக் கேள்வியால் வெட்கித் தலை குனிந்தனர் சிமேனும், திபேயும்!

பேசிய களைப்பில் அலக்சாண்டருக்கு மேல் மூச்சு வாங்கியது. "பாரசீக நாட்டு வைத்தியர்களை அழைத்து வந்து காட்டினாலொழிய இந்த வியாதியைக் குணப்படுத்துவது அவ்வளவு சுலபமல்ல." என்றான் கிளீட்டஸ். சிமேனும் திபேயும் தலையசைத்து அதை ஆமோதித்தனர்.

கிரேக்கத் தளபதி செலூகஸ் இந்த யோசனையைக் கேட்டவுடன் துள்ளி எழுந்தான். "கிளீட்டஸ், உன்னுடைய யோசனை மிகவும் விசித்திரமானது. வேந்தனின் நோய் தீர்க்க விரோதி நாட்டு வைத்தியர்களை அழைக்கச் சொல்லும் உன்னுடைய யோசனை மிக மிக விந்தையானது"—செலூகஸ் சீறினான்.

கிளீட்டஸ் முகத்தில் அலட்சியப் புன்னகை தோன்றியது. "ஏன் ஆத்திரப் படுகிறாய், செலூகஸ்? கிரேக்க நாட்டின் தலை சிறந்த வைத்தியர்கள் கையை விரித்து விட்டார்கள். நோயோ புதிது. பாரசீக வைத்தியர்களைத் தவிர, வேறு யாரை அழைப்பது?...வழியிருந்தால் சொல்...எப்படியாவது மன்னரின் உயிர் காப்பாற்றப்பட வேண்டும்."

அலக்சாண்டர் நோயின் தொல்லை பொறுக்க முடியாமல், உடலைப் போட்டு முறித்துக் கொண்டிருந்தான்.

"பாரசீக வைத்தியர்களின் நாணயத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. அவர்களை அழைப்பது விஷப் பரிட்சைதான்" என்றான் செலூகஸ். அலக்சாண்டர் செலூகஸையும் கிளீட்டஸையும் கூர்ந்து கவனித்தான். பிறகு மெதுவாக தலையணையில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு பேச ஆரம்பித்தான்.

"கிளீட்டஸ், பாரசீகத்தின் சிறந்த வைத்தியர்கள் யார் என்று தெரிந்து கொண்டாயா?"

"இன்று முழுவதும் அதற்காகத்தான் பல மைல்கள் சவாரி செய்தேன். பாரசீக மன்னன் டரயஸ்ஸின் அரண்மனை வைத்தியன் ஒருவன் இருக்கிறான். அவன் பெயர் பிலிப். அகார்னேனியா என்ற கிராமத்தில் இப்பொழுது வசித்து வருகிறான். உங்கள் விருப்பம் தெரிந்து, அழைத்து வர ஆள் அனுப்பலாமென்று, அவன் இருப்பிடம் மட்டும் தெரிந்து கொண்டு வந்து விட்டேன்" என்றான் கிளீட்டஸ்.

கிளீட்டஸ், 'டரயஸ்ஸின் அரண்மனை வைத்தியன் பிலிப்' என்ற உடனே, சுற்றியிருந்தவர்கள் முகங்களில் ஒரு பரபரப்புக் காணப்பட்டது. இந்த யோசனைக்கு - எதிர்ப்புத்தான் பலமாக இருந்தது! அலக்சாண்டர் ஒரு கணம் கண்மூடி மௌனமாக இருந்தான்.

"கிளீட்டஸ், அந்த பிலிப்பை உடனே அழைத்து வர ஏற்பாடு செய்!"

அலக்சாண்டர் உத்திரவிட்டு விட்டான். அதை இனி மறுத்துப் பேச மற்றவர்களுக்குத் துணிவேது?

★

மறுநாள் காலை; அலக்சாண்டர் முன் பிலிப் நின்றுகொண்டிருந்தான்!

"உன் பெயர்?"

"பிலிப்"

"ஊர்...?"

"அகார்னேனியா"

"தொழில்?"

"வைத்தியம்"

"சரி, என் உடலைப் பரிசோதித்துப் பார்த்து, வியாதியைக் குணப்படுத்த முடியுமா என்று சொல்"

பிலிப் அலக்சாண்டரின் உடலைப் பரிசோதனை செய்தான். சிறிது நேரம் கண்களை மூடிக் கொண்டு யோசனை செய்தான்.

"என்ன வைத்தியரே, நோயின் குணம் புரிகிறதா? உமது வைத்தியத்துக்குக் கட்டுப்படுமல்லவா?"

"வேந்தே, இந்நோய் மிகக் கொடியது. ஆனால் இந்தப் பக்கங்களில் சாதாரணமாகக் காணப்படுவது. சிட்னஸ் நதிக்கரைக்கே உரிய இந்த வியாதிக்கு, இந்நதிக் கரையில் கிடைக்கும் மூலிகைகளே சிறந்த மருந்தாகும். நாளை காலை நான் கொண்டுவரும் மூலிகையின் சாற்றை அருந்துங்கள். பத்து நாழிகைக்குள்ளாகவே உங்கள் நோய் குணமாகி விடும்"—வைத்தியன் மிகுந்த தன்னம்பிக்கையோடு பேசினான். அவன் பேசி முடிக்கும் வரையில் அலக்சாண்டரின் கண்கள் அவன் முகத்தையே கூர்ந்து நோக்கின.

"நாளை காலை மருந்துடன் வந்து சேர்ந்து விடு. வியாதி குணமானால் வரலாற்றில் உன் பெயர் அழியாத இடம் பெறும்" என்றான் அலக்சாண்டர். பிலிப் தலை வணங்கி விடை பெற்றுக் கொண்டான்.

வைத்தியன் வெளியே சென்றவுடன் சுற்றியிருந்தவர்களிடையே ஒரு சலசலப்பு ஏற்பட்டது. அலக்சாண்டர் நோயின் உபாதை பொறுக்க முடியாமல் மீண்டும் புலம்ப ஆரம்பித்தான்.

★

"வேந்தே......!"

அரை மயக்கத்திலிருந்த அலக்சாண்டர் மெதுவாகக் கண் விழித்துப் பார்த்தான். அவன் கண்கள் கொவ்வைப் பழம் போல் சிவந்திருந்தன.

"ஊம்......"

"கடிதம், வேந்தே!"

"யாரிடமிருந்து......?"-உணர்ச்சியில்லாமல் அலக்சாண்டர் இந்தக் கேள்வியைக் கேட்டான்.

"பார்மீனியோவிடமிருந்து..." என்று கூறிக் கடிதத்தை நீட்டினான் கிளீட்டஸ். அதைக் கேட்டவுடன் அலக்சாண்டர் சுருட்டி வாரிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். ஏனெனில் பார்மீனியோவிடமிருந்து வரும்செய்தி மிக முக்கியமானதாகத்தான் இருக்க வேண்டும். பார்மீனியோ, அலக்சாண்டரின் மெய்காப்புப் படைத் தலைவர்களில் ஒருவன். அலக்சாண்டரின் உயிருக்கு எதிராகச் செய்யப்பட்ட எத்தனையோ சதிகளைக்கண்டு பிடித்து, அலக்சாண்டரின் பேரன்புக்கு உரியவனாகத் தன்னை ஆக்கிக்கொண்டிருந்தான்.

"கிளீட்டஸ், கடிதத்தைப் படி" என்றான் அலக்சாண்டர். கிளீட்டஸ் கடிதத்தைப் படித்தான்.

○ தொடர்ச்சி 10-ம் பக்கம்

அலெக்ஸாண்டர்

பி. சி. கணேசன்,
பி. எஸ். சி., பி டி.

# புதையல்

மு. கருணாநிதி

## 27. ஒரு கை பார்த்தனர்!

சுற்றிலும் போலீசார்—அதோடு அனல் மொழி சிந்திடும் தகப்பன் தாண்டவன்—இவர்களுக்கிடையே சிக்கிக் கொண்ட பரிமளாவுக்கு எப்படித் தப்புவது என்றே புரியவில்லை. அங்கே, அத்தானின் கதி என்ன ஆயிற்றோ புரியவில்லை. கூர்மாவதாரம் போன்றவனின் கையிலேயிருந்த அந்தக் கூரிய சத்தி அத்தானின் நெஞ்சிலே பாய்ந்துவிட்டதோ என்னவோ-அதை நினைத்துக் கவலைப்படுவதா? அல்லது, தான் விடுபட முடியாதபடி சிக்கிக் கொண்டதை நினைத்து கவலைப்படுவதா?

மின்னற் பொழுதுதான்! அதற்குள் அந்தக் கன்னல் மொழிக்காரி ஒரு புது வழி கண்டுபிடித்துவிட்டாள். தன்னையும் குற்றமற்றவளாக்கிக் கொள்ள—அதோடு தன் அத்தானையும் காப்பாற்றிட அந்த வழியே சிறந்ததென எண்ணினாள்; பதட்டத்தோடு பேசினாள்.

"என்னைத் தூக்கிக் கொண்டு வந்தவன், அதோ வீட்டில்தான் இருக்கிறான். வாருங்கள்! உடனே போய் அவனைப் பிடிக்கலாம்" என்று பரிமளா கூறியதும், போலீசார், "எங்கே? எந்த வீட்டில்?" என்று ஆவலாகக் கேட்டார்கள்.

"என்னோடு வந்தால் காட்டுகிறேன்-யாரோ ஒரு பயங்கரமான மனிதன் - பார்ப்பதற்கே விகாரமான சொரூபம்-அவன்தான் என்னைத் தூக்கிவந்து கெடுக்க முனைந்தான். நல்லவேளையாக தக்க சமயத்தில், ஒரு கிழவரும் ஒரு வாலிபனும் குறுக்கே புகுந்து என்னைக் காப்பாற்றினார்கள். முரடனுக்கும் அந்த வாலிபருக்கும் சண்டை-இந்நேரம் கொலைகூட நடந்திருக்கலாம் — சமயம் பார்த்து நான் தப்பி வந்து விட்டேன்" என்று பதட்டத்தோடு பேசினாள், பரிமளா!

'வாருங்கள் போகலாம்' என்று துடி துடிப்போடு போலீசார் புறப்பட்டார்கள். பரிமளா வழி காட்டிக் கொண்டே போனாள். தாண்டவனுக்கு எதுவுமே புரியவில்லை. மகள் கூறுவது உண்மையாகத்தானிருக்குமா? அவள் இஷ்டத்துக்கு விரோதமாக எவனோ ஒரு கொடியவன் அவளைத் தூக்கி வந்திருப்பானா? அல்லது அவளே அவளது கள்ளக் காதலனுடன் ஓடிவந்துவிட்டு, தப்பித்துக் கொள்வதற்குப் பொய் சொல்லுகிறாளா? என்று யோசித்தபடி நடந்தார். இருட்டிலேபரிமளா முன்செல்ல, போலீசார் பின் செல்ல—கடைசியாக "இதுதான் வீடு!" என்று பரிமளா நின்றாள். போலீசார் 'திபு திபு' என்று உள்ளே நுழைந்தார்கள். பரிமளாவும் ஆவல் ததும்ப உள்ளே எட்டிப் பார்த்தாள். அவள் உட்பட அனைவருமே ஏமாந்து விட்டார்கள்!

> "எழுவானுக்குப் தொழுவானுக்கும் இடையிலே...
> காக்கை மூக்கு நிழலிலே...
> கள்வர் புகும் வழியிலே...
> கண்டாலும் 'கம்மாளர்' கண்ணிலே...
> எழுபது கோடி பசும்பொன்... "

ஐயப்பனோ, மாயாண்டியோ, அல்லது துரையோ யாருமே அங்கு காணப்படவில்லை. சிதறிக் கிடந்த சாமான்களையும், உடைந்து கிடந்த கண்ணாடிக் குவளைகளையும் மாத்திரமே காண முடிந்தது. பரிமளா திடுக்கிட்டாள். அத்தானை எப்படிப் பார்க்க முடியும் என்று ஏங்கினாள். அவனது முகத்தைப் பார்க்காமல் அவளால் ஒரு விநாடி கூட இருக்க முடியாது-தவித்தாள்—தணல் வீழ் மெழுகாக உருகினாள். போலீசாரும் விளக்கின் உதவி கொண்டு வீட்டை சோதனை போட்டனர். ஒரு துணி—ஆம்; ரத்தம் தோய்ந்த துணி கிடைத்தது. சந்தேகம் வலுத்தது. மீண்டும் வீடு முழுதும் தேடினார்கள். தோட்டத்துப் பக்கமும் சோதனையை நீட்டினார்கள். ஒரு மரக்கிளை ஒடிந்து கிடந்தது. ஒரு அழகான பூச்செடி மிதியுண்டு வளைந்து கிடந்தது. உற்றுக் கவனித்தார்கள். இரண்டு மூன்று பேரின் காலடிகள் பதிந்திருந்தன அதிலிருந்து அவர்கள் ஓடியிருக்க வேண்டுமென்று யூகித்தார்கள்.

"சண்டை நடந்தது என்றாயே; நடந்து எவ்வளவு நேரம் இருக்கும்?" என்று போலீசார் பரிமளாவைக் கேட்டார்கள்.

"நான் உங்களை சந்திக்கும் போதெல்லாம் சண்டைநடந்துதானிருக்க வேண்டும். சில நிமிஷங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் எப்படி மறைந்தார்களோ; தெரியவில்லை" என்று வியப்புக் குறி காட்டினாள் அவள்!

"சில நிமிஷங் கூட ஆகவில்லை என்றால், பிறகு எங்கே போயிருப்பார்கள்? ஆச்சரியமாயிருக்கிறதே—" என்று மூக்கிலே விரலை வைத்தபடி நின்றார்கள், போலீசார்.

"அதோ! அதோ!!" என்று ஒரு போலீஸ்காரர் துள்ளிக் குதித்தார் "என்ன?" என்று அனைவரும் திடுக்கிட்டுத்திரும்பினர். ஒரு பெரிய வெட்டரிவாள் அங்கே புதரோரத்தில் கிடந்தது. அதை எடுத்துப் பார்த்தார்கள். ரத்தம் தோய்ந்த அரிவாள்! ஆம்; சிறிது நேரத்துக்கு முன்புதான் ஏதோ நடந்திருக்கிறது; இல்லாவிட்டால் அந்த அரிவாளில் ரத்தம் சொட்டிக் கொண்டேயிருக்குமா? ரத்தம் படிந்த அந்த அரிவாளைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது, இன்னொரு போலீஸ் "அட, இதோ பார்த்தீர்களா?" என்று கதித்தார்-அவர் குறிப்பிட்ட பொருளையும் கூர்ந்து கவனித்தார்கள். ஒரு கட்டாரி! ஐயப்பனின் கையிலேயிருந்த கட்டாரி போலத்தானிருந்தது! அதையும் சோதித்து எடுத்துக் கொண்டார்கள் — "இன்னும் ஏதாவது அகப்படும்—தேடுவோம்" என்ற ஆசையுடன் மீண்டும் சோதனை ஆரம்பமாயிற்று!

இரவு நேரம்-ஒழுங்குபடுத்தப்படாத கொல்லைப் பக்கம் — கல்லும் முள்ளும் நிறைந்த இடம்-அங்கே அடர்ந்திருக்கும் புதர்களிலே போலீசாரின் கண்கள் வட்டமிட ஆரம்பித்தன.

"இதைப் பார்த்தீர்களா?" என்று ஒரு போலீஸ்காரர், வியப்பை வெளியிட்டார். "என்ன, என்ன!" என்று எல்லோரும் ஓடினார்கள். புதரை சற்று விலக்கி, "இதோ பாருங்கள்!" என்று காட்டினார். கையிலுள்ள அரிக்கன் விளக்கினது உதவியால், அவர் காட்டியது என்ன என்று தெரிந்து கொள்ள மற்றவர்கள் முயன்றார்கள். ஒரு கை கீழே கிடந்தது! சிகப்பு வர்ணம் பூசப்பட்டது போல அந்தக் கை முழுதும் ரத்தத்தால் நனைந்திருந்தது. முழங்கையோடு வெட்டப்பட்டு புதரிடுக்கில் கிடந்த அந்தக் கை, யாருடையதாயிருக்கலாம் என்ற சந்தேகம் பலமாக எழுந்தது போலீசாருக்கு! அனைவரும் வெட்டப்பட்டுக் கிடக்கும் அந்தக் கையைச் சூழ்ந்து கொண்டு, தங்கள் தங்களுக்கு உதயமான யோசனைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

"வாலிபமான மனிதனின் கையாகத் தெரியவில்லையே—சுருக்கங்கள் நிறைய இருக்கின்றனவே!" இப்படி ஒருவர்!

"இல்லை-இல்லை; வயதான மனிதனின் கையாகத் தெரியவில்லை இது! வாலிபக் கையாகத்தான் தெரிகிறது."—இது இன்னொருவர்.

"ஏதாவது பச்சைக் குத்தியிருக்கிறதா, பாருங்கள்!"

"இல்லை-பச்சையும் குத்தவில்லை-சிகப்பும் குத்தவில்லை!"

"ரகளை நடந்திருக்கிறது. ரகளை முடிவில் இந்த வெட்டரிவாளால் கையை வெட்டிப் போட்டிருக்கிறார்கள். அதைத் தவிர நம்மால் வேறெதுவும் சொல்ல முடியாது."



"இந்தக்கை, பரிமளாவைத் தூக்கிக் கொண்டு வந்தவனுடையதா? அல்லது அவளைக் காப்பாற்ற வந்த வாலிபனுடையதா? பரிமளா குறிப்பிட்ட அந்தக் கிழவனுடையதா?"

இப்படி ஒருவருக்கொருவர் யோசனையை வெளியிட்டு வீணாகக் குழப்பத்தில் ஆழ்ந்தார்கள். தாண்டவனுக்கு மனசு, பகீர் பகீர் என்றது. கொலை நடப்பதற்கான சூழ்நிலைகள் உருவாகியுள்ள இந்த இடத்திலே, பரிமளா தனியாக அகப்பட்டுக்கொண்டு என்ன கஷ்டப்பட்டாளோ, என்ற அதிர்ச்சி தாண்டவனின் இருதயத்திலேதோன்றி மறைந்தது. அவள்மீது அவருக்கு முன்னரே ஏற்பட்டுள்ள சந்தேகம், அந்த அதிர்ச்சியை நீடிக்க விடவில்லை.

"இந்த வெட்டுண்ட கைக்கு உரியவன் யாரென்று எப்படிக் கண்டுபிடிப்பது?"

"அது என்ன பெரிய காரியம்? கை முடமாக யார் அலைகிறானோ; அவனைப் பிடித்து விசாரிப்பது!"

"கைமுடமாக ஒருவனை—ஆண்டவன் புண்ணியத்தில் அப்படி ஒன்பதாயிரம் பேர் உலவுகிறார்கள். அதில் யாரையப்பா கண்டுபிடிப்பது?"

"எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. கைதேர்ந்த ரேகை சாஸ்திரியிடம் இந்தக் கையைக் காட்டி, இது யாருடையது என்று கேட்டுத் தெரிந்து கொள்ளலாமே!"

"அப்படியெல்லாம் ரேகை சாஸ்திரி கிடைக்கமாட்டான். அப்படி ரேகை சாஸ்திரிகள் கிடைப்பதாயிருந்தால், போலீசுக்கு உதவியாக நாய்கள் தேவையில்லை-அந்த ஆரூடக்காரர்களே போதும்!"

"இவ்வளவு வம்பு ஏன்?—இப்போது நான் கண்டு பிடிக்கிறேன்; இது யாருடைய கை என்று இருக்கவே இருக்கிறாள் பரிமளா. அவள் சொல்லட்டும், இது யாருடைய கை என்று!"

"ஆமாம்; அதான் சரி. பரிமளாவுக்குத் தெரியலாம்; இது யாருடைய கை என்று. அவளால் சுலபமாக சொல்ல முடியும்" -இவ்விதம் ஒரு போலீஸ்காரர் அமோதிப்பு வழங்கினார்.

"பரிமளா! நீதான் சொல்லேன்; இது யாருடைய கை?" என்று கேட்டுக்கொண்டே பரிமளாவின் பக்கம், போலீஸ் அதிகாரி திரும்பினார். என்ன ஆச்சரியம்! அங்கே நின்று கொண்டிருந்த பரிமளா, எப்படித்தான் அதை விட்டு நழுவி ஓடிவிட்டாளோ தெரியவில்லை. வெட்டுண்ட கையைப் பார்த்து யோசனைகள் பரிமாறிக் கொண்டிருந்தவேளை-இதுதான் நல்ல தருணமென்று அவள் ஓடிவிட்டாள். 'பரிமளா!' என்று ஆத்திரத்தோடு கத்தினார் தாண்டவன்.

போலீசாருக்கு வேதனையும் வெட்கமும் தாளவில்லை கஷ்டப்பட்டு அலைந்து திரிந்து, கடைசியில் கையிலே கிடைத்தவளை விட்டுவிட்டோமே என்று வருந்தினர். "எங்கே போயிருப்பாள்? இப்போதே அவளைத் தேடிப் பிடியுங்கள்!" என்று மற்றவருக்கு உத்திரவு போட்டுவிட்டு, போலீஸ் அதிகாரி கன்னத்திலே கை வைத்துக்கொண்டு உட்கார்ந்து விட்டார் சோர்வோடு!

★

அந்த இருட்டிலே—திக்குத் தெரியாமல் நடந்து கொண்டிருந்தாள் பரிமளா. அத்தானும் கிழவரும் எங்கே போயிருப்பார்கள்? அவர்களை எப்படிக் கண்டுபிடிப்பது? கண்டு பிடிக்கும் வேலையில் ஈடுபடும்போது போலீஸ் கையில் சிக்கி விட்டால்?

இப்படியெல்லாம் பரிமளாவின் இருதயம் குமுறிக்கொண்டேயிருந்தது. கால்போன பக்கமெல்லாம் சென்றாள்—ஓடினாள்—சிறிது நடந்தாள்—மீண்டும் ஓடினாள்-விடிவதற்குள் எங்கேயாவது போய் மறைந்துவிட வேண்டுமென்று திட்டம் போட்டபடி நடந்தாள். அப்படி நடந்து கொண்டிருப்பவளின் நெஞ்சத்தை எதிரொலிப்பதைப் போல், பெருக்கெடுத்தோடும் ஆற்றின் முழக்கம் கேட்டுக் கொண்டிருந்தது. ஊரை விட்டு வெகுதூரம் வந்துவிட்டாள். புதுப்பட்டி எனும் கிராமத்திற்கும் ராஜாமடம் என்ற ஊருக்கும் இடையிலே உள்ள ஆறுதான் அது! அந்த ஆற்றைக் கடந்துதான் பரிமளா செல்லவேண்டும் என்ன செய்வது என்று யோசித்தாள். யோசித்துக் கொண்டிருக்கும் போதே, தொலைவிலே யாரோ வருவது தெரிந்தது. ஆம்; இரண்டு பேர்! அவர்கள் பரிமளாவை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள், தன் அத்தானும்—மாயாண்டிக் கிழவருமாக இருக்கக் கூடாதா என்று வருத்தமுற்றாள். அந்த உருவங்கள் பரிமளாவை அணுகின.

"அத்தானைப் போலத்தானிருக்கிறது சாயல்!" — என்று தனக்குத்தானே அவள் ஆறுதல் கூறிக் கொண்டாள். இரு உருவங்களும் இன்னும் அருகாமையிலே வந்துவிட்டன! பரிமளா, கண்கொட்டாமல் அந்த உருவங்களைப் பார்த்துக் கொண்டே நின்றாள்.

[வளரும்]

# சிங்கத் தம்பிகளே! தங்கத் தங்கைகளே!

# 'குறளு'க்கு ஒரு கதை!

## பிறை வானம்

பிள்ளைகள் பகுதி...

கையில் 'குறளு'டன் ஓடி வந்தது கற்பகம். பள்ளித் தேர்வில் தோற்றுப் போன பையன்களின் பட்டியலைப் புரட்டிக் கொண்டிருந்த அண்ணன் ஏறிட்டுப் பார்த்தார். பாவம், அவருக்குப் பயம், எங்கே கற்பகம் வாயைத் திறந்துவிடப் போகிறதோ-கேள்விமேல் கேள்வி அடுக்கி திணர வைக்கப் போகிறதோ-என்று!

ஆனல், ஓடிவந்த கற்பகமோ, "அண்ணு! இந்தக் குறளுக்குப் பொருள் சொல் அண்ணு" என்றது. புத்தகத்தை நீட்டியது. அண்ணு வாங்கிப் பார்த்தார்.

பேராண்மை என்பதறுகண்;
ஒன்று உற்றக்கால்
ஊராண்மை மற்றுஅதன் எஃகு

என்பது அந்தக் குறள்.

"இது புரியவில்லையா, கற்பகம்? பகைவரை எதிர்க்கும் சக்தி பெரிய வீரமாகுமாம்; ஆனல், பகைவருக்கே ஒரு துன்பம் வரும்போது உதவி செய்யும் பண்பு இருக்கிறதே, அது அந்த வீரத்திற்கு கூர்மையைப் போலவாம்" என்றார்.

"என்ன?..."— சந்தேகத்தோடு இழுத்தது கற்பகம்.

"புரியவில்லையா? இரு: ஒரு கதை சொல்லி விளங்க வைக்கிறேன்..."

"கதையா?..." என்றபடியே பக்கத்தில் உட்கார்ந்து கொண்டது கற்பகம். கதை என்றால்—'அதுவும் கருத்துள்ள கதை என்றால்தான் கற்கண்டாயிற்றே, அதற்கு! அண்ணு ஆரம்பித்தார்.

"ஒரு ஊரில் ஒரு ராணியாம்..."

"என்ன? ராணியா?... வேண்டாம்; வேண்டாம்; இந்த ராஜா ராணி கதை எனக்கு வேண்டவே வேண்டாம்!"

"அடடா! அவசரப்படுகிருயே! இந்தக் கதையில் மாயப்பாய்—மந்திரக்கோல் எல்லாம் வராது. பயப்படாமல் கேளேன். அந்த ராணியின் பெயர் அற்புத ராணி..."

"அவள் நாட்டின் பெயர்...?"

"மறந்து விட்டேனே! அந்த நாட்டின் பெயர்...வந்து...வந்து... என்னவோ 'புரம்' என்றல்லவா வரும்? ஆமாம்: ஆமாம்: விஜயபுரம்! மேலே கேள். அந்த ராணிதான் விஜயபுரத்தை ஆண்டு வந்தாள். ரொம்ப ரொம்ப நல்லவள். நாட்டு மக்களுக்கு கவலை வந்தால் அவள் படாத பாடுபடுவாள்; அமைதி இழந்து தவிப்பாள்; முதல் வேலையாக கவலையை விரட்டுவாள்; களிப்பை அழைப்பாள். அவ்வளவு இளகிய மனம் கொண்டவள். நாடு முழுதும் செழிப்பு—மக்கள் முகங்களில் எல்லாம் சிரிப்பு—அதைக் கண்டு ராணிக்குப் பூரிப்பு! இவ்விதமாக நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. இப்படி இருக்கையில், மற்ற நாட்டு அரசர்கள் எல்லாம் விஜயபுரத்தின் மீது படையெடுத்தார்கள்"

"படையெடுப்பா? அந்த நல்ல நாட்டின் மீதா?..."

"ஆமாம்; அருமையான நாடல்லவா? அன்பு பெருகும் இடமல்லவா? முற்றுகையிட்டார்கள்; போர் புரிந்தார்கள். ஆனல், அத்தனை பேரும் 'வாபஸ்' பெற்று ஓடியே போனர்கள். ராணி தன் படையின் உதவியால்—வீரர்களின் திறமையால் அவர்களையெல்லாம் விரட்டியே விட்டாள், உன்னுடன் வாய்ச் சண்டைக்கு வந்து நான் சில சமயத்தில் 'வாபஸ்' பெறுவேனே, அதைப் போல..."

"போ, அண்ணு! எப்போதும் கிண்டல்தான் உனக்கு; கதையைச் சொல்..."

"கடைசியில் ஒரு பெரிய அரசர் வந்தார். தனியாக அல்ல; யானைப் படை-குதிரைப் படை-இப்படிப் பல படைகளுடன். போர் புரிந்தார். சாதாரண போர் அல்ல; கடுமையான போர்..."

"போரின் முடிவு என்ன அண்ணு?"

"என்னவா? எப்படியிருக்கும் என்று நீயே யோசித்துப் பாரேன். வெற்றிவேலனுக்குதான்-அதுதான் அந்த அரசரின் பெயர்-அமோக வெற்றி!"

"ஐயையோ! அப்புறம்?"

"நாடு அவர் கைவசமாயிற்று. ராணி போன இடமே தெரியவில்லை. கோட்டையின் மேல் பறந்து கொண்டிருந்த ராணியின் கொடி இறக்கப்பட்டது. வெற்றிவேலரின் கொடி பறந்தது"

"ஆமாம்; தோற்றுப் போன ராணி எங்கே போனுள்?"

"அட அவசரமே! அதுதான் சொல்லிக் கொண்டே வருகிறேனே! ராணி எங்கே ஓடினுள்? எப்படித் தப்பினுள்?-என்பது ஒருவருக்குமே தெரியவில்லை. அவளை கைது செய்யச் சென்ற வீரர்கள் எல்லாம் ஏமாந்து திரும்பினுர்கள்"

"அப்பறம் என்ன ஆயிற்று?"

'சண்டை முடிந்தஅன்று இரவு, வெற்றிவேலர் தன் கூடாரத்தில் இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தார். அவருக்குத் தூக்கம் வரவில்லை. என்ன செய்வது என்று யோசித்தார். கடைசியில் கூடாரத்தைவிட்டு வெளியே வந்தார். போர் நடந்த இடத்தை நோக்கி நடந்தார், தனியாக—மெதுவாக! ரொம்ப தூரம் நடந்துவிட்டார். 'திரும்பிச் செல்லலாம்' என்று அவர் எண்ணியபோது—எண்ணித் திரும்பியபோது அவரை நடுநடுங்க வைக்க ஒரு பயங்கரம் அங்கே காத்திருந்தது. ஆமாம்; எதிரே—அவரை நோக்கி, பயங்கரமாகப் பிளிறிக்கொண்டு பாய்ந்து வந்தது ஒரு மதம் கொண்ட யானை! அரசர் என்ன செய்வார்? 'ஐயையோ' என்று அலறிவிட்டார்! வேறுஎன்னதான் செய்யமுடியும்? எதிர்க்கலாம், என்றாலோ கையில் எந்த ஆயுதமுமில்லை. உலாவ வந்தவருக்கல்லவா இப்படி ஒரு அபாயம் வந்துவிட்டது! அவர் ஓடினார். மன்னன் என்று பார்க்கும், மதம் கொண்ட யானை! அவரை தும்பிக்கையில் கவ்விப் பிடித்து, தரையில் மோதிமோதிக் கொல்ல அந்த மூர்க்க மிருகமும் நாலுகால் பாய்ச்சலில் பாய்ந்து துரத்தியது"

"அப்பப்பா! பயமாயிருக்கே அண்ணு..."

"அப்புறம் கேள்.யானை வெற்றிவேலரை நெருங்கிவிட்டது. அவர், தான் சாகத்தான் போகிறோம் என்று முடிவு கட்டிவிட்டார். யானையின் தும்பிக்கை அவர் முதுகிலும் பட்டுவிட்டது. அடுத்த கணம்...? நினைக்கவே திடுக்கிடச் செய்கிறதல்லவா? வெற்றிவேலர் அலறினார். ஆனல், அதைத் தொடர்ந்து மற்றுமொரு அலறலும் கேட்டது...

"என்ன? என்ன?"

"ஆமாம்; அலறியது யாருமல்ல; அந்த மதங்கொண்ட யானையேதான்! அதன் முகத்திலே ஒரு கூரியவேல் பாய்ந்தது அப்போது! அடுத்தகணம் சரமாரியாக அதன் முதுகு, வயிறு எல்லா இடங்களிலும் சரக் சரக் என்று பாய்ந்தன பெரிய பெரிய வேல்கள். பீறிட்டடித்தது ரத்தம். யானை அலறியது. மரணக்குரல் கொடுத்தது. மன்னனைத் துரத்துவதை மறந்தது. திரும்பி ஓடியது. ஓடிக் கொண்டேயிருந்தது. கடைசியில் கண்காணு இடத்தில் மறைந்தது. இதைக் கண்ட மன்னர் திகைத்தார். 'வேலெறிந்து யானையைத் துரத்தியது யார்? செத்துவிட்ட எனக்குஉயிரூட்டியது யார்?' என்று முணுமுணுத்தார். சுற்று முற்றும் உற்றுப் பார்த்தார். அவருக்குப் பக்கத்தில் யாரோ நிற்பது தெரிந்தது. நன்றி தெரிவிக்க நடந்தார். ஆனல் அந்த உருவமோ, நகர்ந்தது. 'மன்ன! போய் விடுங்கள். உடனே இந்த இடத்தை விட்டுப் போய் விடுங்கள்! என் மனம் மாறுமுன் — என் கையிலிருக்கும் மற்றவேல்கள் உங்கள் மார்பிலும் பாய்ந்து விடு முன் போய் விடுங்கள்!' என்று சொல்லிய படியே வேகமாகப் போய் விட்டது அவ்வுருவம். மன்னருக்கு எல்லாம் மாயமாக இருந்தது. 'என்னைக் காப்பாற்றிய அந்த உருவம் யாருடையது? நான் போகாவிட்டால் என்னையும் கொன்றுவிடுமாமே! இதென்ன புதுமை; புரியாத புதுமை' என்று முணகினார். அந்த உருவத்தையே சற்று நேரம் கவனித்தார். 'ஆ' என்று அதிசயத்தால் வாயைப் பிளந்தார். மறுகணம், தன் கூடாரத்தை நோக்கி வேகமாக நடந்தார்."

"அவரைக் காப்பாற்றியது யார் அண்ணு?—"

"கடைசியில் புரியும்; காத்திரு! மறுநாள் பொழுது புலர்ந்தது. ஆனல் என்ன ஆச்சரியம்! வெற்றிவேலரின் படைகள்—அவரது பல்லக்கு எல்லாம் விஜயபுரத்தை விட்டு புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தது. கோட்டையின் மேலும் வெற்றிவேலரின் கொடியில்லை"

"ஏன்? கொடி எங்கே போயிற்று...?"

"எங்கேயும் போய் விடவில்லை. வெற்றிவேலரிடமேதான் இருந்தது. அதற்குப் பதிலாக பழைய கொடியே—அற்புத ராணியின் கொடியே பறந்து கொண்டிருந்தது. கொடிக்குகீழே ஒருலிகிதமும் தொங்கியது. "அற்புத ராணி! மதம் கொண்ட யானை என்னைத் துரத்தியது. ஆனல், நீ என் மனதில் நிரம்பியிருந்த மண்ணாசையைத் துரத்தி விட்டாய். தெரியும் எனக்கு. நேற்றிரவு வேல் எறிந்து எனக்கு வாழ்வளித்தவள் நீதான் என்று! இதோ, உன் நாடு உனக்கே! உன் நாட்டில் 'ஒரு நாள் விருந்தாளி'யாக நான் இருந்தேன். இதோ, திரும்பிப் போகிறேன். வாழ்க விஜயபுரம்! வளர்க உன் நற்பண்பு!

—மன்னன் வெற்றிவேலன்"

அண்ணு கதையை முடித்தார்.

"அருமையான கதை அண்ணு! குறளுக்கும் பொருள் புரிந்துவிட்டது.இதோ, இன்னுமொரு குறள்; இதற்கும்..." மற்றொரு கதைக்கு அஸ்திவாரமிட்டது கற்பகம்.

"ஆரம்பித்து விட்டாயே; இன்றைக்கு இது போதும்; மீண்டும் அப்புறம்" என்றார் அண்ணன்.

வழக்கம்போல் 'ஏன்' என்று கேள்வி எழுப்பவில்லை கற்பகம். அப்பால் நகர்ந்தது.

—சொர்ணம்



# பாஞ்சாலப் போர் வீரன்!

பூனை தான் போட்ட குட்டிகளில் ஒன்றை விழுங்கி விடுமாம்!

அரசியலில் கூட அப்படித்தான்; ஆண்டாண்டு காலமாக சிந்தனைச் சூட்டிலே வைத்து அடைகாத்து செயல்படுத்தும் வகையிலே பொறித்த கொள்கைகளை—நல்ல திட்டங்களை—விழுங்கி ஏப்பமிடும் பூனைகள் ஒன்றல்ல—பல இருக்கின்றன—கதராடை உடுத்தி, காந்தி குல்லாய் தரித்து, எலி வேட்டையாட தன் பரிவாரங்களுடன் திக் விஜயத்துக்கும் கிளம்பி விடுகின்றன!

பெருமைக்குரிய பான்மையான தேசிய வீரர்களுக்கு நாக்பூர் காங்கிரசின் மணி போன்ற தீர்மானம் மறந்து போயிருக்கும்! ஏன்; அவர்கள் தலைவர் நேருவிற்கே நினைவில்லாத போது, இவர்கள் என்ன, சாமான்யர்கள், நினைத்து கொண்டா இருக்கப் போகிறார்கள்!

புடம் போட்டது! அதே தீப் பொறிதான்எரிமலைபோல் இன்று பஞ்சாபிலே நெருப்புக் குழம்பை வாரி இறைக்கிறது! எதிரிப்படை நெடுங்கும் அந்த எரிமலையின் வான் தழுவும் சிகரம்தான் மாஸ்டர் தாரா சிங்-அகாலி தளத்தவரின் ஆற்றல்மிகு தலைநிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராக வாழ்வு தொடங்கினர்—இன்றோ படை நடத்தும் தலைவனுக, சீக்கிய மக்களின் வாழ்வு செப்பனிடும் சீரிய பணியில் ஈடுபட்டிருக்கிறார்!

அவர் ஆசிரியராக இருந்தபோது எப்படி அவரை 'மாஸ்டர்' என்று வாஞ்சை பொங்க அழைத்தார்களோ, அதைப் போலத்தான் இன்றும் அவரைக் கூப்பிடுகிறார்கள்!

அந்த இளஞ் சிங்கம் ஒன்பது முறை சிறைக்கோட்டம் புகுந்திருக்கிறது. இந்தியாவுக்குச் சுதந்தரம் கிடைத்தபிறகு, இவரைத்தான் முதல் முறையாகக் கைது செய்து காந்தீயமும், சாத்வீகமும் தங்கள் முகத்திலே கரி பூசிக்கொண்டதாகவும் குறிப்பிடுகிறார்கள்!

1947-ஆகஸ்ட்-15-ந்தேதிக்கு முன்பு 'சத்தியாக்கிரகம்' என்றால், கழுத்திலே மலர்ச் சரங்கள் விழும்—சண்டாள சர்க்கார் கவனிக்கவில்லையே என்று காய்ந்து விழுவர் பலர்!

உண்ணாவிரதம் ஒப்பற்ற தியாகச் சின்னமாகஇருந்தது—சட்ட மறுப்பு சுதந்திரம் வேண்டி எழுப்பப்படும் சங்கீதமாக இருந்தது!

ஆனல் 1947— ஆகஸ்டிற்குப் பிறகு...?

அசோகச் சக்கரம் சுழன்றது. தடியடி பெற்றோர் — தலையறுபட்டோர்—தர்பார் ஏறினர். இருட் சிறையிலே —ஈரத்தரையிலே வாழ்நாள் கழித்தோர் இராணுவ மரியாதை பெற்றனர். பிறகு...?

உண்ணாவிரதம் — உதவாக்கரைத் திட்டமாயிற்று!

சுதேசக் கோஷம் சுக்கல் சுக்கலாயிற்று! சத்தியாக்கிரகம் தேசத் துரோகம் என்றனர்!

"நீதி வேண்டுமென்று சத்திருன, உண்ணாமல் உயிர் விடுகிறான். பித்து பிடித்த ஏகாதிபத்யம் எடுத்துப் பார்க்கிறதா?என்னவேண்டும் உனக்கு? அரசாங்கம் உனக்குச் செய்ய வேண்டியது என்ன?—என்று ஒருமுறையாவது வாய் திறக்கக் கூடாதா?"—என்று வெள்ளையனைக் குற்றம் கண்டோர், இன்று அவர்களையும் புறங்காணும் அளவுக்கு ஆதிபத்யக் கூடத்திலே ஆட்டம் போடுகின்றனர்.

பூனை ஒரு குட்டியைத் தான் தின்னும் என்பார்கள். ஆனல், இந்தத் தேசியப் பூனைகளோ குழந்தைகளன்ன கொள்கைகள் அனைத்தையும் கொன்று குவித்து விட்டார்கள்!

★

1920-ம் ஆண்டு! நாக்பூரிலே மாநாடு கூட்டினர்கள்! நாக்கு இனிக்கும் அளவுக்கு சுவையான திட்டங்களைச் சமைத்தார்கள்!

பலத்த ஆரவாரத்துக்கிடையே மகாத்மா காந்தியின் எண்ணத்தைத் தீர்மானமாக்கினர்!

இதோ அந்தத் தீர்மானம்: 'மொழிகளின் அடிப்படையில் மாகாணங்களின் எல்லைக்கோடுகளை மாற்றிடமைக்கவேண்டும்'

அந்தத் தீர்மானம் கக்கிய தீப்பொறிதான் முப்பத்தி இரண்டு ஆண்டுகள் கழித்து, பொட்டி ஸ்ரீராமலுவின் பொன்னுன திரேகத்தைப்

வர்! சீக்கிய மக்களின் சினம் கொண்ட வேங்கை! பாஞ்சால மக்களுக்கோ அவர் தேசிய அமுது! பாராளும் அரசினர்கோ அவர் பற்றுப் பாம்பு!— எந்நேரத்தில் சீறி எழுவாரோ என்று சிந்தை கலங்கியிருக்கின்றனர் ஏக இந்தியப் பித்தர்கள்!

லியால்பூர் கால்சா உயர்

## வெட்கம்! வெட்கம்!!

பேபோட்டும் பூசாரியின் மகன்—சத் கதா காலட்சேபம் நடத்தும் சன்யாசி வீட்டுப் பையன்—இவர்கள் விஞ்ஞானம் படித்தால் நாம் வியப்படைய மாட்டோம்—பழமைச் சேற்றிலே புதுமைத் தாமரை பூத்திருக்கிறதே யென்று பூரிப்படைவோம்!

இதோ—திடுக்கிடச் செய்யும் செய்தி!

இந்திய உபகண்டத்து பிரதமர்—'ஆசியா ஆசியர்களுக்கே' என்று ஆவர்த்தனம் பிடிக்கும் அருமை நேரு—தன் பேரக் குழந்தைகளை எங்கு படிக்க வைக்கிறார் தெரியுமா?

இங்கல்ல; இங்கிலாந்தில்!

பாரத கலாச்சாரத்தின் பெருமை பேசும் பண்டிதர் தன் பேரக் குழந்தைகளை — உயர்தரக் கல்விக்காக அல்ல என்பதை நினைவில்வையுங்கள்! — பிரிட்டன் பாட்சாலைக்கு அனுப்பி வைத்திருக்கிறார்!

எட்டு திக்கும் புகழ் பரப்பும் சாந்திநிகேதத்துடன் தொடர்பு வைத்திருக்க வேண்டிய மோதிலால் குடும்பம், கடல் தாண்டி தன் சிறார்களை அனுப்பி வைத்திருக்கிறது!

காந்தியடிகளின் வார்தா திட்டத்திலே வல்லவர்களாக விளங்க வேண்டிய குழந்தைகள், அவர்கள் பாஷையிலே கேவலம்—வெறும் குமாஸ்தாக்களை தயார் செய்யும் ஆங்கிலப் பள்ளிக்கு அனுப்பப் பட்டிருக்கின்றனர்!

ஆதாரக் கல்வி என்னும் கடலின் கரை காண வேண்டிய பிள்ளைகள் ஆங்கிலக் கல்வி கற்கின்றன!

ஏனிந்த நிலை? இந்தியாவிலே அந்தக் குழந்தைகளுக்குத் தகுந்த பள்ளிகள் கிடையாதா?

களி மண்ணிலே பொம்மை செய்யக் கற்றுக் கொடுக்கும் ஆதாரக் கல்வி பற்றி ஊருக்கு உபதேசிப்பவர்கள், தங்கள் வீட்டுப் பிள்ளைகளை தூரதேசத்துக்கு அனுப்புவானேன்?

வெட்கம்! வெட்கம்! பிரதமரின் பேரக் குழந்தைகள் பிரிட்டனிலே படிக்கின்றனவாம்! இந்தியாவின் கல்வி இலாகாவிற்கே அவமானம்! காந்தியடிகளின் ஆதாரக் கல்விக்கே அவமானம்! சுதேசம்பேசிப் பெற்ற சுயராஜ்பத்துக்கே அவமானம்! தாங்க முடியாத அவமானம்!!

"வெள்ளையன் வெளியேறிய பிறகு காங்கிரஸ்காரருக்கு சுயராஜ்யம் கிடைத்தது; ஜின்னுவுக்கு பாகிஸ்தான் கிடைத்தது; சீக்கியருக்கு என்ன கிடைத்தது?"—என்று கேட்டு, 'ஒரே இந்திய மந்திரம்' ஓதுவோருக்கு சவுக்கடி தருகிறார் தாராசிங்!

தாராசிங்கின் தாடி அசைந்தால் போதும்—எதிரிகள் தலை உருளும்! விரோதிக் கூட்டம் வெந்து நீராகும்!

நிலவைத் தொடரும் தாரகைக் கூட்டம்போல தன்மானம் காக்கும் சீக்கியச் செல்வர்கள் அவர் சிரத்தின் அசைவிற்காகக் காத்திருக்கின்றனர்!

மொழி வழி மாகாணம் கேட்டு அவர் உயர்த்திய கொடி —இதோ, ஓங்கிப் பறக்கிறது!

அமிர்தசரசிலே சீக்கியர்களின் தங்கக் கோயில்—அதனருகிலே தங்கம் நிகர் கொள்கைக்காக தாராசிங்கின் தலைமையிலே ஆயிரமாயிரம் வீரர்கள் அரசாங்கக் கைதிகளாகின்றனர்!

"1920-ம் ஆண்டு நாக்பூர் தீர்மானத்தின் நகல் வழங்கிய பூனைகளே! பஞ்சாப் மாகாணத்தைப் பிரியுங்கள். இல்லையேல் பாய்ந்தோடும் இரத்தத்திற்குப் பதில் சொல்லுங்கள்"—என்று அந்த வீரர்கள் களம் நோக்கிப் பாய்ந்தவண்ணமிருக்கிறார்கள்! இன்றுவரை இரண்டாயிரத்துக்கு மேற்பட்டோர் கைதாகியிருக்கிறார்கள்—போராட்டமும் தொடர்கிறது!

மாஸ்டர் தாராசிங் வாளை உறை கழற்றிவிட்டார்! பளபளக்கும் வாளை வெற்றி முகட்டில் உயர்த்தும் வரையிலே ஓய மாட்டார்! வாய்வீரம் பேசியோரை வெற்றி காணுதவரையிலே அந்தத் துணை வேண்டாப் போர்வீரன் சணை தொடுத்துக் கொண்டுதானிருப்பார்!

—மாறன் பி. ஏ. (

## நம்பிக்கை......

★ 5-ம் பக்கத் தொடர்ச்சி

"மாவீர,

வணக்கம். வஞ்சகன் பிலிப்பை நம்பி வாழ்க்கையை இழந்து விடாதே. எனக்குக் கிடைத்திருக்கும் செய்திப்படி, பிலிப் உனக்குக் கொடுக்கப் போவது நோய் தீர்க்கும் மருந்தல்ல: டரயஸ்ஸின் உத்திரவுப் படி அவன் கொடுக்கப் போவது உன் உயிர் குடிக்கும் விஷம். எச்சரிக்கையாயிரு! பிலிப்பின் விஷக்கோப்பை உன்னுடைய உதடைத் தீண்டுமுன், என் கடிதம் உன் கையில் கிடைத்து விட வேண்டுமே என்பதே என் கவலை.

—பார்மீனியோ"

கிளீட்டஸின் முகம் கலவர மடைந்தது. கடிதத்தை அலக்சாண்டரின் கையில் கொடுத்தான். செலூகஸ் முகம் ஆத்திரத்தால் சிவந்தது. அலக்சாண்டர் முகம் மட்டும் சலனமின்றி இருந்தது!

"வேந்தே...!"

மருந்துக் (?) கோப்பையோடு அலக்சாண்டரின் முன் பிலிப் நின்று கொண்டிருந்தான். கடிதத்திலிருந்து கண்களை உயர்த்தி பிலிப்பை ஒரு முறை அலக்சாண்டர் நோக்கினன். பிலிப்பின் பார்வையும் அலக்சாண்டரின் பார்வையும் ஒன்றையொன்று ஊடுருவிச் சென்றன. கடிதத்தை இடது கையில் பிடித்தபடியே வலது கையில் பிலிப் நீட்டிய கோப்பையை அலக்சாண்டர் வாங்கிக் கொண்டான். கடிதத்தையும், கோப்பையையும். பிலிப்பின் முகத்தையும் அவன் மாறி மாறிப் பார்த்தான்.

கோப்பையை உதடுகளை நோக்கி உயர்த்தினன். "வேண்டாம்" என்று ஒரு சேரக் குரலெழுப்பினர் கூடியிருந்தோர். செலூகஸின் கைகள் வாளை உருவ ஆயத்தமாயின!

அலக்சாண்டர் நண்பர்களை கையமர்த்தினன். அவன் உதடுகளில் புன்னகை நெளிந்தது! இடது கையிலிருந்த கடிதத்தை பிலிப்பிடம் நீட்டிய படியே, வலது கையிலிருந்த கோப்பையின் ரசத்தை அருந்தினன். பாசறையில் ஒரு கணம் பயங்கரமான அமைதி நிலவியது!

கடிதத்தைப் படித்த பிலிப் அலக்சாண்டரின் கால்களைப் பிடித்துக் கொண்டு. அவைகளைத் தன கண்ணீரால் கழுவினன்.

"வேந்தே, உயிருக்குயிரான நண்பர்களின எதிர்ப்புக் கிடையிலே கூட, எதிரி நாட்டு வைத்தியனிடம் எப்படி உங்களுக்கு இவ்வளவு நம்பிக்கை பிறந்தது?"

பிலிப்பை வாரித் தூக்கி நிறுத்தினன் அலக்சாண்டர். அவன் கண்களில் வெற்றிக் குறி தாண்டவமாடியது.

"பிலிப், நம்பிக்கை என்ற அச்சாணியிலதான் இந்த உலகம சுழன்று கொண்டிருக்கிறது. இனியும் சுழன்று கொண்டிருக்கும். நான் உன்னைப பார்த்தவுடனேயே உன் தொழில் நாணயத்தில் நம்பிக்கை வைததுவிட்டேன். என்னுடைய முடிவில எனக்கு எப்பொழுதுமே அசையாத நம்பிக்கை உண்டு. நீ என் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்து மருந்து கொடுத்ததால், உலகம இந்த நிகழ்ச்சியிலிருந்து மனித சமுதாயத்தின நன்னடத்தையில் நம்பிக்கை வைக்க வேண்டியதன் அவசியத்தைப் புரிந்து கொள்ளும். நீ உனனுடைய தொழில் ஒழுக்கம் மறந்து, நம்பிக்கை துரோகியாகி விஷம் கொடுத்தாலும், அலக்சாண்டர் நம்பிக்கைத் துரோகத்தால் மாண்டான் என்று உலகம் எச்சரிக்கையடையும். சாம்ராஜ்யம் நிறுவி அதனல் சரித்திரத்தில் 'மாவீரன்' என்று பெயர் பெறுவதை விட, வருங்கால சந்ததிக்கு வழிகாட்டியாக அலக்சாண்டரின் வாழ்க்கை அமைந்தத என்பதில்தான நான் பெருமையடைகிறேன்" என்றுன் அலக்சாண்டர்.

பிலிப்பின் முகத்தில் நன்றியுணர்ச்சி வழிந்தோடியது: கிளீட்டஸ் முகம் அலக்சாண்டரின் அறிவுரையால் மலர்ந்தது: செலூகஸ் முகம் நாணத்தால் தலை கவிழ்ந்தது: அலக்சாண்டரின் முகம் மட்டும் சலனமற்று விளங்கியது!

★

[பின் குறிப்பு: மேலேயுள்ள கதையில் வரும் நிகழ்ச்சிகளும், பாத்திரங்களும் வரலாற்று உண்மைகள். உண்மை நிகழ்ச்சிகளை பின்னணியாக்கியே கதை பின்னப் பட்டிருக்கிறது]

★

## ஊர்க்கிண்டல்(1)

சென்னையில் சிலரைப் பார்த்து.

"நீங்கள் எங்கே யிருக்கிறீர்கள்?" என்று கேட்டால், அவர்கள் சொல்லும் பதில் ஒரு கிண்டலான கற்பனைக்கு அஸ்திவாரமாக இக்கிறது.

இதோ, ஒருவர் சொல்லுகிறார், "நான் ஆயிரம் விளக்கில் இருக்கிறேன்" என்று!

"ஆமாம்"—

"இவர் "ஆயிரம் விளக்கில்" தான் இருக்கிறார்!

## கொள்கை வளருது கோபுரம் போலே!

### பொதுக்கூட்டங்கள்

**குடந்தை**

18-6-55 மாலை 6-மணிக்கு, குடந்தை அரண்மனைத் தோட்டத்தில், தஞ்சை மாவட்ட தி. மு. க. சார்பில், பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்குப் பாராட்டுக் கூட்டம் நடைபெறும். தோழர் கே.கே. நீலமேகம் தலைமையில், தோழர்கள் இளங்கோ, க. அறிவழகன் ஆகியோர் பேசுவர்.

**விருத்தாசலம்**

18-6-55 சனி மாலை 6-மணிக்கு, தோழர் ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ. தலைமையில், அறிஞர் அண்ணு அவர்கள் பேசுவார்கள்.

**குன்றந்தூர்**

18-6-55 மாலை 6-மணிக்கு, தோழர் டி. கே. சிவகுமாரன் அவர்கள் தலைமையில், தோழர்கள் டி. கே. சீனிவாசன், கே. என். சம்பந்தன், டி. எம். கணபதி-ஆகியோர் பேசுவார்கள்.

**பேராவூரணி**

20-6-55 திங்கள் மாலை 6-30 மணிக்கு பேராவூரணி காணிப் பதிவு மனைக்கு அருகில், நாடியம் தோழர் ஜெயராமன் தலைமையில், அறிஞர் அண்ணு, தோழர்கள் அ. பொன்னம்பலனர், என். எஸ். இளங்கோ ஆகியோர் பேசுவர்.

★

### திருச்சியில் தி. மு. க. மாநில மாநாட்டு நிதியளிப்பு விழா-- பொதுச் செயலாளருக்கு வரவேற்பு

19-6-55 ஞாயிறு மாலை 6 மணிக்கு

திருச்சி டவுன் ஹால் முன்

பொதுக் கூட்டம்

தலைவர்: ஏ. பி. தர்மலிங்கம்

பேசுவோர்:

அறிஞர் அண்ணு
நெடுஞ்செழியன்
மதியழகன
அரங்கண்ணல்
வில்லாளன்

### திருச்சி மாவட்ட தி. மு. கழகத் தோழர்கட்கு வேண்டுகோள்

ஜூலை முதல் வாரத்தில், வட்டக் கழகங்கள் அமைக்க வேண்டியிருப்பதால், இதுவரை பதிவு செய்யப் பட்ட கழகங்கள் தவிர, பதிவு செய்யப்படாத கழகங்கள் 30-6-55க்குள் தேர்தல் நடத்தி, மாவட்ட கழகத்துக்கும், தலைமை கழகத்துக்கும், அனுப்பி பதிவு செய்து கொள்ள வேண்டுமென திருச்சி மாவட்டச் செயலாளர் தோழர் ஏ. பி. தர்மலிங்கம் அறிவிக்கிருர்.

### தலைமைக் கழக அறிக்கை

### புதுவையைப் பொறுத்துக் கழகச் சொற்பொழிவாளர்கள் கவனிக்க வேண்டியவை

புதுவை வட்டத்தைப் பொறுத்த வரையில், எந்தப் பொது நிகழ்ச்சியாக இருந்தாலும், புதுவை நகர தி. மு. கழகச் செயலாளர் தோழர் ச. சிவப்பிரகாசம் அவர்களது இசைவு இல்லாமல் கழகத் தோழர்களோ, அல்லது கழகச் சொற்பொழிவாளர்களோ கலந்து கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

"புதுவையிலுள்ள 'திராவிடர் முன்னணி', 'மக்கள் முன்னணி' முதலிய அமைப்புகள், புதுவை தி. மு. கழகத்தின் உடன்பாடில்லாத புறம்பான அமைப்புகளாகும்," என்று புதுவை தி. மு. கழகம் அறிவிப்பதால், புதுவை தி. மு. கழகத்தின் இசைவு இல்லாமல் பொதுவாகக் கழகத் தோழர்களும், குறிப்பாகக் கழகச் சொற்பொழிவாளர்களும் அவற்றின் நடவடிக்கைகளில் கலந்துகொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இரா. நெடுஞ்செழியன்
பொதுச்செயலாளர், தி. மு. க.
'அறிவகம்' சென்னை.

## அறிஞர் அண்ணு

### நிகழ்ச்சிகள்

ஜூன் 18: உளுந்தூர் பேட்டை (பெயர் சூட்டு விழா) மாலை 6 மணிக்கு விருத்தாசலம்—பொதுக் கூட்டம்

19: திருச்சி [காலை — திருமணம்: மாலை — பொதுக் கூட்டம்]

20: பேராவூரணி (பொதுக்கூட்டம்)

21: பட்டுக்கோட்டை [பொதுக்கூட்டம்]

22: முத்துப் பேட்டை [பொதுக்கூட்டம்)

23: மாயவரம் (பொதுக்கூட்டம்)

### பொதுச் செயலாளர் காரை வருகை

21—6—55 அன்று, பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் காரைக்காலுக்கு வர இசைந்துள்ளார். அன்று மாலை 4-மணிககு மாபெரும் ஊர்வலமும், 6 மணியளவில் பொதுக் கூட்டமும் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

### பிறப்பு

'முரசொலி'யின் புதுப்பட்டி விற்பனையாளர் தோழர் பி. ரெங்கசாமி அவர்களின் துணைவியார் திருமதி கோதை நாச்சாரம்மாள் சென்ற 23-5-55 திங்களன்று ஒரு ஆண் மகவுக்குத் தாயானுர்கள். —மகிழ்கிறோம்.

பலராமபுரம் 'முரசொலி' விற்பனையாளர் தோழர் அ. சுப்பிரமணியன் அவர்களின் துணைவியார் திருமதி மனோகரம் அம்மையார், சென்ற 13—6—55 அன்று ஒரு பெண் குழந்தைக்குத் தாயானுர்கள். குழந்தைக்கு 'தமிழச்சி' என்று பெயர் சூட்டப்பட்டது—மகிழ்கிறோம்.



## இயல் இசை கூத்து

# கேஸ்கர் வாழ்க!

இந்திய அரசினரின் செய்தி ஒலிபரப்பு இலாக்காபற்றியும்—அதன் தன்னிகரில்லாத சர்வாதிகாரியாக விளங்கும் **கேஸ்கர்** பற்றியும் நம் நாட்டு மக்களுக்கு நன்ருகத் தெரியும். கொஞ்சம் தனிப்பட்ட முறையில் அவரை அறிமுகப் படுத்த வேண்டுமானல், "இந்திய நாட்டிலே 5-ஆண்டுத் திட்டங்கள் ஏதுமில்லா மலேஆஸ்ட்ரோ, அமிர்தாஞ்சன் போன்ற தலைவலி மருந்துகளின் உற்பத்தியைப் பெருக்கிய உத்தமர்"—என்றுதான் அவருக்கு சிறப்புப் பாயிரம் படிக்க வேண்டும்.

கேஸ்கர் கரடி வடிவிலே ரேடியோவில் கத்துவார்! ஓய்வு நேரங்களிலே பொழுது போக்குவதற்காக சினிமாவுக்குச் செல்லலாமென்றாலோ அங்கும் இவர் நம்மைத் துரத்தியடிக்கிறார்!

செய்திப் படங்கள் எடுப்பதற்காக இலாக்கா வொன்று நமது வரிப் பணத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது.

அந்த இலாக்காவிலே பணியாற்றுபவர்கள், சேட்டுகளை விடக் கொடியவர்கள்! நேருவை விட இரும்பு உள்ளம் கொண்டவர்கள்! தெற்கு என்றாலே அவர்களுக்கு வேம்பு தான். தென்னுட்டில் விசேஷ செய்திகளோ-நிகழ்ச்சிகளோ கிடையாது என்பதுதான் அவர்கள் நினைப்பு!

கும்பமேளாவின் நிர்வாணக் காட்சியை வெட்கமில்லாமல் காட்டுவார்கள்! [அந்த செக்ஸ் அப்பீலை நமது காருண்யமிக்க சென்சார் அனுமதிக்கிறார்கள். பக்தி ரசம் சொட்டுகிறதல்லவா!] நேரு இராவணன் உருவத்தைக்கொளுத்தியவிழாவை நமக்கு வேதனை தரும் அளவுக்கு நீட்டிக் கொண்டே போவார்கள்!-இதுபோன்ற வடநாட்டுக் கோமாளிக் கூத்துகளையெல்லாம் நமது செய்தி இலாக்கா ஒன்று விடாமல் வெளியிடுகிறது.

தென்னுட்டவர்கள் வரி கொடுக்கிறார்கள்—என்ற உண்மையை கேஸ்கரின் இலாக்கா பல சமயம் மறந்து விடுகிறது!

★

இந்த செய்திப் படங்களின் 'ஹீரோ' யார் தெரியுமா? சாட்சாத் நேருதான்!

பிரபல நடிகர்களான திலீப் குமாரும், ராஜ்கபூரும்கூட அவ்வளவு அதிகமான 'போஸ்' கொடுத்திருக்க மாட்டார்கள்; ஆனால் நேரு செய்திப் படங்களில் வெவ்வேறு கோணங்களில் அவர்களையெல்லாம்விட அதிகமாகவே நடித்திருக்கிறார்!

நேருவைப் பிரதான 'பாக்ஸ்-ஆபீஸ்' நடிகராகக் கொண்டிருக்கும் கேஸ்கரின் அந்தப் படக் கம்பெனியில், ஆங்கிலப் படங்களில் வருவது போலவே ஏராளமான 'எக்ஸ்ட்ரா' நடிகர்களும் நடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

யார் தெரியுமா அந்த 'எக்ஸ்ட்ரா'க்கள்?—நமது காங்கிரஸ் பிரமுகர்கள்தான்!

பாபுராவ் வேடிக்கையாகக் கூறியிருப்பதைப் போல, நியூஸ் ரீல்களின் பெரும்பகுதியில 'இந்தியாவின் ஊமைப் பிரஜைகளாம் கால்நடைகளையும், காங்கிரஸ்காரர்களையுந்தான் அதிகம் காட்டுகிறார்கள்'! ஒரே ரீல் படத்தில் சுமார் ஆறு தடவைக்கு மேல் பிரசாத், நேரு, ராதாகிருஷ்ணன் போன்றோரின் தலை தெரிவதாக அவர் கணக்கு காண்பிக்கிறார்!

காங்கிரஸ்காரர்களுக்கு பிரச்சாரம் வழங்குவதற்குத்தான் இந்திய சர்க்காரில் செய்தி இலாக்கா இயங்குகிறதா?

36-கோடி மக்களின் வரிப் பணம் இப்படித்தான் விரயமாக்கப்பட வேண்டுமா?—இப்படிப் பல கேள்விகள் நம்மைக் குடைகின்றன.

செய்தி இலாக்காவின் 340-நெ. படத்தை அநேகமாக எல்லோரும்பார்த்திருக்கலாம். எகிப்தின் ஏந்தல் **நாசர்**-ஆப்கானிஸ்தானத்து **நாய்ம்**-போன்றோர்கள் விமான நிலையத்தில் வந்து இறங்குவது-அவர்களை நேரு வரவேற்பது போன்ற சாட்சிகள் காட்டப் படுகின்றன. நாசர் பேசுவதற்கு மைக்கின் அருகில் போகிறார் அவர் குரல் ஒலி நமக்குக் கேட்கவில்லை. உடன் நேருவின் குரலும், அவர் பேசுவதும்தான் நம் காதுகளைத் துளைக்கிறது!

விருந்தினராக இரு நாடுகளின் தலைவர்கள் வந்திருக்கிறார்கள். பிற நாட்டு அரசியல் தலைவர்கள் எந்த முறையில் பேசுகிறார்கள்—என்பதைத் தெரிந்து கொள்வதற்காக மக்களெல்லாம் ஆவலை அடக்கிக் கொண்டு கொட்டகையிலே உட்கார்ந்திருக்கிறார்கள். அந்த நேரத்திலே நேருவின் குரலை மட்டும் ஒலி பரப்பினல் நமக்கெல்லாம் எப்படியிருக்கும்? நேருவின் பேச்சை யார் கேட்டார்கள்? இந்தியாவிலுள்ள அத்தனைச் செய்தித்தாள்களிலும் அவரைப் பற்றித்தானே நாம் படிக்கிறோம்—எப்பவோ ஒரு முறை இந்த மண்ணை மிதிக்கும் அகில உலகத் தலைவர்கள் சிலரின் குரலைப் பதிவு செய்தால் செய்தி இலாக்கா சிதைந்தா போய்விடும்?

இப்படிப் பல கேடுகளுக்கு கேஸ்கர் காரணமாக இருந்தாலும், அவரால் ஒரு சாராருக்கு நன்மை இருக்கிறது படக்காட்சிக்கு சில நிமிஷங்கள் தாமதமாகவே செல்லும் பழக்கம் கொண்டவர்கள் நம்முடைய செய்தி இலாக்காவிற்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஏனெனில், படத்தின் துவக்கத்தில் செய்திப் படங்களைத்தானே காட்டுகிறார்கள்! அநாவசியமாக அவைகளைப் பார்த்து சலிப்பை ஏன் உண்டாக்கிக் கொள்ள வேண்டும்?

கருத்து: தாமதமாக சினிமாவுக்குப் போனால் தலைவலியிலிருந்து தப்பலாம்! ★

நேஷனல் புரொடக்ஷன்ஸ் 'ராஜாராணி'யில் எஸ். எஸ். இராஜேந்திரன்.

## வெள்ளி வீதி

### அம்பிகாபதி

எஸ் கே. பிக்சர்சார் தயாரிக்கும் அம்பிகாபதி படத்திற்கான வேலைகள் மும்முரமாக நடைபெற்று வருகின்றன. இந்தப் படத்தை கிருஷ்ணன் பஞ்சு டைரக்ட் செய்வார்கள். திரைக்கதை வசனம் கருணாநிதி எழுதுகிறார் என்பது முன்பே தெரிந்தது தானே!

★

### ரங்கோன் ராதா

பரணி ஸ்டுடியோவில் ரங்கோன் ராதா படப்பிடிப்பு 11-ந்தேதி முதல் நடைபெறுகிறது. சிவாஜி கணேசன், பானுமதி, எம். என். ராஜம், சம்பந்தப்பட்ட காட்சிகள் படமாக்கப்பட்டன. காசிலிங்கம் இதை டைரக்ட் செய்து வருகிறார்.

★

### சந்துரு படம்

கேமிரா சந்துரு ஆரம்பித்திருக்கும் புதிய படத்தின் பெயர் வில்லாளன் அல்லது மாங்கனி என்று இருக்கும் போல் தெரிகிறது. இதை கவிஞர் கண்ணதாசன் எழுதுகிறார். சிவாஜி கணேசன், ராஜேந்திரன் முதலியோர் நடிப்பார்கள் எனத் தெரிகிறது.

★

### செல்லப்பிள்ளை

ஏ. வி. எம். தயாரிப்பான செல்லப்பிள்ளை வரும் 24-ம் தேதி திரையிடப்படுகிறது. இதில் நடிப்புப்புலவர் கே. ஆர். ராமசாமி அவர்கள் மிகத் திறமையாக நடித்திருப்பதோடு, சபாஷ் பெறுகிற அளவுக்கு சண்டைகளும் போட்டிருக்கிறாராம். இந்தப் படம் நீலகண்டனின் கதை வசனம் டைரக்ஷன்' என்று விளம்பரப்படுத்தப்பட்டு, இப்போது முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டு, எம். வி. ராமன் டைரக்ஷனிலே உருவாகியிருக்கிறது.






தங்கவயல்.

(?) 'ஆசிய ஜோதி' ரஷ்யாவிலிருந்து திரும்பும்போது என்ன கொண்டு வரும்?

மாங்கோட்டைகள் என்று நீர் எதிர்பார்க்காதீர்!

கு. கோவிந்தன்; பொன்னம்மாபேட்டை, சேலம்.

(?) மரணத்திற்கும் உறக்கத்திற்கும் உள்ள பேதமென்ன?

மனிதன் சனவு காணவேண்டிய தொல்லை மரணத்திலேஇல்லை.

வீரராசன்; பெங்களூர்-3.

(?) கடவுள் இல்லையென்பவர்கள் யார்? உண்டு என்பவர்கள் யார்?

இல்லை என்பவர்கள் காணாதவர்கள்; உண்டு என்பவர்கள கண்டதாக நடிப்பவர்கள்.

இரா. தம்பி; மதுரை.

(?) 'திராவிடர் கழகங்களின் அரசியல் கோரிக்கைகளோ, சமுதாயக் கோரிக்கைகளோ இதுவரை மக்களுடைய ஏகோபித்த ஆதரவைப் பெறவில்லை. இனியும் அத்தகைய ஆதரவைப் பெறுமென்று நம்புவதற்கில்லை' என்று ம. பொ. சிவஞானம் எழுதியிருக்கிறாரே; இது எதை நினைவூட்டுகிறது?

'கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பம் தெரியாது' என்ற பழமொழியைத்தான் நினைவூட்டுகிறது.

வேலாயுதம்; ஈரோடு.

(?) ஒரு திராவிடர் கழக வாரப் பத்திரிகை, தங்களையும், தங்கள் கட்சியையும் மிக மிக மட்டமான பாஷையிலே தாக்கி வருகிறதே, ஏன்?

அது அப்படித்தான்—ஆறு மாதத்திற்கு அதற்கு உடம்பிலே அப்படி ஒரு 'நமச்சல்' ஏற்படும்—பிறகு ஆறு மாதம் அடங்கிக் கிடக்கும்.

சி. பெ. கிருட்டினன்; காட்டாம்புதூர்.

(?) பதவிக்காக கொள்கையை விற்பவர்களை யாருக்கு ஒப்பிடலாம்?

ராமசாமி படையாச்சியாருக்கு!

இந்த வாரம் பரிசு பெறும் தோழர் :
(●) ஏ. ஹக்கீம்,
அரகண்டநல்லூர்
[தென்ஆர்காடு மாவட்டம்]

எஸ். வி. சார்லஸ்; நரிமுடக்கு, ஆரப்பள்ளம்.

[?] மூளையை அடகு வைத்துவிட்டு வேலை செய்யும் இடம் எது?

காங்கிரஸ் கிளைச் சங்கங்களின் விலாசங்கள் அத்தனையும் எனக்குத் தெரியாதே; என் செய்வது?

எஸ். சந்தசாமி; மதுரை.

[?] எழுத்தாணியாரே! அனுபவத்தைக் கக்கும் கண்ணுக்கும், கற்புக்கும் வித்தியாசமென்ன?

கண் ஒரு முறை கெட்டால் சிகிச்சை செய்து சரிப்படுத்திக் கொள்ளலாம்.

(●) ஏ ஹக்கீம் அரகண்டநல்லூர்.

(?) தி. மு. க. வளர்ச்சிக்கு எது காரணம்? கொள்கையா? அதை விளக்கும் அலங்காரப் பேச்சா? கொள்கைதான் என்றால் திராவிடர் கழகம் வளராதது ஏன்?

**இரண்டு வயலிலேயும் தெளிக்கப்பட்டது ஒரே வித விதைதான்! ஆனால், இங்கே களை எடுப்பதும், நீர் பாய்ச்சுவதும், கழனியைக் கண்காணிப்பதும் கடமையுணர்ச்சியோடு கவனிக்கப்பட்டு வருகிறது. அதனால் வளர்ச்சி காணப்படுகிறது; வளம் தெரிகிறது!**

(?) ஒரே கொள்கை, ஒரே திட்டத்தை நிறைவேற்ற இரண்டு கட்சிகள் அவசியம்தானா?

ஒரே வேலையைத்தானே செய்கின்றன என்று, இரண்டு கண்களில் ஒன்றை யாராவது குத்திக் கொள்வார்களா!

மல்லிகைச் செல்வன்; வேப்படிதாளம்.

(?) ரயில் நின்ற பிறகு தண்டவாளத்தில் படுப்பதுதான் வீரமோ? ரயில் ஓடும் போதல்லவா படுக்க வேண்டும்?

'ரயில் நின்றால், பிறகு ஓடவே ஆரம்பிக்காது' என்று உமக்கு எந்த புத்திசாலியப்பா சொன்னது?

த. ப. நடராசன், தஞ்சை.

(?) கை கூடாக் காதலுக்கு இதுகாறும் காட்டப்படாத உபமானம் யாது?

"இந்தக் காதலில் அவனுக்குக் கிடைத்த வெற்றி, சடலைக் சாண முயலுபவனுக்குக் கிடைக்கும் வெற்றியைப் போன்றது!"—இததான நண்பரே; புதிய உபமானம்!

எஸ். டி. தாஸ்; சின்னாளப்பட்டி.

(?) சாமியார்களைப் பற்றி நாம் கூறும்போது, நம்மை எதிர்த்து எக்காளமிடும் எத்தர்களும், பக்தர்களும் "நமது பாணி"யிலேயே சாமியார்களைக் குறித்து நேரு கூறும்போது மௌனமாயிருந்து விடுகிறார்களே; ஏன்?

நேரு தரை. வெறும் வாய்ப் பேச்சு வீரர்—அவர் வார்த்தைகள் சாமியார் சமுதாயத்தை அழித்துவிடாது என்ற அழியாத நம்பிக்கை அந்த எத்தர்களுக்கும், பக்தர்களுக்கும் ஏற்பட்டிருப்பதால்தான அவர்கள் நேரு துரையை எதிர்ப்பதில்லை; அண்ணாதுரையை எதிர்க்கிறார்கள்!

என். இராமனுசன்; மதுரை.

(?) கேள்வி கேட்பது கடினமா? பதில் சொல்வது கடினமா?

இரண்டுமல்ல; கேள்வி கேட்டுக் கொண்டே காலங் தள்ளியவர்கள் பதில் சொல்வதுதான்!

சேருயன்; சிறுதாரை.

(?) முடி சூடா மன்னர் நேரு எப்போது முடி சூடும் மன்னராவார்?

விரைவில்! ரஷ்யா சென்று திரும்பி வந்த பிறகு, காங்கிரஸ் வீரர்கள் அவருக்கு அந்த வைபவத்தை நடத்திவைத்தாலும் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை! இதுவும் 'சோஷலிச மாதிரி'யில் ஒரு 'அயிட்டம்' என்று அவர்கள் வாதிடலாம்!

அப்துல் ஹஹ; அரகண்டநல்லூர்

(?) ரோஜாவைச் சுற்றி முள் இருப்பதேன்?

அழகுக்குப் பக்கத்தில் ஆபத்து எப்போதும் இருக்கும் என்பதை உணர்த்துவதற்காக!

(?) 'கும்பமேளா' என்பதற்கு என்ன பொருள் கூறுகிறீர்?

ஆப்பிரிக்காவின் காட்டு மிராண்டிகளை நாகரிகச் சின்னங்களாக மாற்றி விட்ட நிர்வாணக் கூத்து! பகுத்தறிவு பேசிய ஆசியாவின் ஜோதி சேற்றிலே விழுந்த சோகத் திருவிழா!—இப்படிப் பல பொருள் உண்டு!



## உங்கள்

• சுழல் விளக்கு' ஒளி வீசி வழி காட்டும் பாதையில் ஆச்சாரியார் நடப்பாரா?

—இரா. தம்பி, மதுரை.

"சினேவின் சாம்பல்" சிறந்ததாக காட்சியளிக்கிறது. சொல்லுக்குச் சொல் மிக இனிதாக இருந்தது.

—பொ. வேங்கடராமன், கிழையூர்.

'குடியாட்சியின் கொள்கை இல்லாத ஆட்சி ஜனநாயக ஆட்சி அல்ல; அலகாபாத்—வீரரும் ஜனநாயக வாதி அல்ல' என்பதின் விளக்கமே சென்ற வாரத் தலையங்கமான 'ஜனநாயக லீலா'

—ஏ. கே. நடராசன், திருவல்லிக்கேணி.

'கல்லும் பேசுமோ காண்'-இதில் கடைசியில், 'சு.ம: நில்லுமய்யா; எங்கே ஓடுகிறீர்?' என்றிருந்ததல்லவா, அது ஆஸ்திகன் எமக்கு ஈங்கு இடமில்லை என்று ஓடுவதைக் குறிக்கிறது.

—உலகேசுவரன், சென்னை-14.

மகாபாரதத்தின் மகிமையை விளக்கும் ஓவியங்கள், 'முயற்சி நண்பன்' அனைத்தும் என் அன்புக்குகந்த அறிவுப படையல்கள்.

—அழ. துரைப்பாண்டியன், கீழவளவு.

'அறியாமையின் அழிவுக்கும், பகுத்தறிவின் வளர்ச்சிக்கும் சினிமா ஒரு காரணமாக இருப்பதால்தான், சினிமாவினால் கொலை, விபச்சாரம் ஏற்படுகிறது என்று சமூக விரோதிகள் கூக்குரலிடுகிறார்கள்' என்று 'சினிமா ஒழிக' பகுதியில் எழுதியுள்ள கட்டுரை மிகச் சிறந்த முறையில் இருக்கிறது.

—மு. சுப்ரமணியன், கரூர்.

கடல் கடந்தோரின் கலங்கிய சொல்லம்பு என் உதிரத்தை உறையச் செய்தது.

—வள்ளுவதாசன், வேலூர்.

முரசொலியில் குறளோவியம் எழுப்புகிற ஒலி ஒப்பு உயர்வற்றது. அவனியில் அனைவராலும் போற்றப்படும் அற்புதக் குறளை அதன் ஆசிரியர் வள்ளுவரின் கருத்தையே மையமாக வைத்து வசன நடையிலே வண்ண ஓவியமாக வழங்கிடும் உங்கள் பணிக்கு எனது வாழ்த்தும் வணக்கமும்.

—பதி திருவண்ணாமலை.

முரசொலி அச்சகம் மின்சார விசை பெற்றுவிட்டது என்ற செய்தி கண்டு மகிழ்கிறேன். 'நினைவுச் சாம்பல்' படித்தோரின் நினைவை விட்டே அகலாது என்பது நிச்சயம். புதையலின் அளவு வர வர பெருத்த ஏமாற்றத்தை அளிக்கிறது!

—டி. ஏ. எஸ். பால், திண்டிவனம்.

ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி. 'முரசொலி' அச்சகம். 4, 128, மவுண்ட்ரோடு, சென்னை-6.

